THE

# CHILD'S HISTORY OF INDIA

## BOOK I

FOR FORM I



BY

C S RAMASWAMY AIYER

# பாலர் இந்திய சரித்திரம்

(புஸ்தகம் 1)



MACMILLAN & CO., LIMITED

MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1920

**Price, 7 Annas]** ** [விலை, 7 அணா

## MACMILLAN'S

# Tamil Geography Series

| FOR CLASS IV | Rs. | A. | P. |
|---|---|---|---|
| **Man's Home** by C. Morrison ... ... | 0 | 8 | 0 |
| **Elementary Geography Reader** ... ... | 0 | 3 | 6 |
| **Do. do.** with the District Geography | 0 | 4 | 6 |

| FOR CLASS V | | | |
|---|---|---|---|
| **Our Home—Madras Presidency** by C. Morrison ... | 0 | 10 | 0 |
| **Geography of the Madras Presidency,** revised and enlarged edition .. ... ... | 0 | 6 | 0 |

| FOR FORM I & CLASS VI | | | |
|---|---|---|---|
| **The Round World** ... .. .. | 0 | 6 | 0 |
| **First Lessons in Geography,** Part I. India and the Southern Continents, revised and enlarged edition ... ... ... ... | 0 | 8 | 0 |
| **Wallis' Atlas Geography of India,** Tamil edition ... | 0 | 6 | 0 |

| FOR FORM II & CLASS VII | | | |
|---|---|---|---|
| **First Lessons in Geography,** Part II. Eurasia, N. America and the British Empire | 0 | 8 | 0 |

| FOR FORM III & CLASS VIII | | | |
|---|---|---|---|
| **The Geography of the British Empire** ... | 1 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| **Johnston's Atlas of India,** Tamil edition ... | 1 | 0 | 0 |
| **Large size Wall Map of the Madras Presidency** ... | 9 | 10 | 0 |

இறைவன் அருள்.

# கௌமார குருகுலம், மன்னார்குடி.

## படிப்பவர்கள் கவனிக்க வேண்டியவை.

1 **படிப்பது எப்படி.** காவல், கதைகள், மன உற்சாகத்திற்கும் காலட்சேபத்துக்கும் படிப்பது. கைத்தொழிலைப் பற்றிய நூல்கள், தேசசரித்திரம், பெரியோர் வாழ்க்கை சரித்திரம், முதலியன அறிவு வளர்ச்சிக்காகப் படிப்பது. இவைகளை ஒரு தரத்திற்கு இரண்டு தரம் கவனத்துடன் படிக்கவேண்டும். தேவாரம், திருவாய்மொழி, குறள், கீதை முதலிய நூல்கள் பக்தி, ஞானம், ஒழுக்கம் உண்டாவதற்குப் படிப்பது. அவைகளை பல முறை ஆழ்ந்து படிப்பதுடன் பாராயணமும் செய்யவேண்டியது

2 **படித்து சீக்கிரம் திருப்பிக்கொடுக்கவும்.** புத்தகங்கள் படிப்பதற்காகவே உள்ளன என அறியவேண்டியது அவசியம். ஆதலால் படிக்காமல் நாம் வைத்திருந்தால் மற்றவர்கள் படிப்பதைத் தடைசெய்யும் பழிக்கு உள்ளாகிறோம்.

3 **படித்த புத்தகங்களைப்பற்றி நண்பர்களுக்குச் சொல்லவும்** இன்ன இன்ன புத்தகம் இருக்கிறது என்றும் அவைகளில் விசேஷங்கள் இன்னவை எனவும் மற்றவர்களுக்கும் தெரிவித்தால் அவர்களும் நம்மைப்போல் படித்து ஆனந்திப்பார்கள்.

4 **புத்தகங்களை நன்றாய்க் காப்பாற்றவும்.** படிக்கும்போது எண்ணை, ஈரம், அழுக்கு இல்லாத கையால் எடுத்துப் படிக்கவும்; சுத்தமான இடத்தில் வைக்கவும்; ஏடுகளை மடிக்காமல், கிழிக்காமல், எழுதாமல் காப்பாற்றவும். அடையாளம் வைக்கவேண்டுமானால் ஒரு காகிதம், நூல், ஓலையால் செய்க. வாங்கும்போது பார்த்து கெடுதல் இருந்தால் தெரிவித்து, வாங்கினவர்களிடம் திருப்பிக்கொடுக்கவேண்டியது முறை. கொடுக்கும் போது காண்பித்துக் கொடுக்கவும். புஸ்தகம் படித்தானவுடன் யாரிடம் வாங்கினீர்களோ அவர்களிடமே



நமது ஜார்ஜ் சக்கரவர்த்தியும் மேரி ராணியாரும்

(பட்டாபிஷேக உடுப்புடன்)

# Child's History of India

BOOK I

**FOR FORM I**



(Based on the Syllabus recently published by the Department)

BY

C. S. RAMASWAMY IYER

HEADMASTER

*Primary Department, The Kellett High School,*

*Triplicane, Madras*

# பாலர் இந்திய சரித்திரம்

(புஸ்தகம் I)

சி. எஸ். ராமசுவாமி ஐயர் எழுதியது

MADRAS

MACMILLAN & CO., LIMITED

MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1920

# PREFACE

THE Author has for nearly thirty years been in intimate touch with the Primary classes, and has felt the great need of a History book in the form of stories which, whilst furnishing the child who begins to read History with an opportunity of gaining interesting and useful information, will at the same time give free scope for the cultivation of an inquiring and reasoning mind

While placing before the young pupils information with a due sense of proportion, care has been taken to avoid as far as possible encroachments on the domains of teaching. The syllabus issued by the Education Department has been followed throughout

The author takes this opportunity of expressing his gratitude to his friend M R Ry. T K. Sundararaja Row, B.A, L T, of the Kellett High School for his valuable suggestions and help

C S. R

# CONTENTS.

# பொருளடக்கம்.

# பாலர் இந்திய சரித்திரம்

## முதல் புஸ்தகம்.

## 1. இந்தியா.

குழந்தைகள்: ராமன்: அப்பா! இன்று காலையில கடை வீதிக்குப் போயிருந்தபொழுது நானாவிதமான உடைகளைத் தரித்த புருஷர்களையும் ஸ்திரீகளையும் கண்டோமே. அவர்களெல்லோரும் ஒரே ஊரைச் சேர்ந்தவர்களல்லபோல் தென்படுகிறார்களே!

கமலம்:—சில ஸ்திரீகளுடைய ஆபரணங்களும், நம் தேசத்தவர்கள் அணியும் மாதிரியில்லை அப்பா! இவர்கள் எந்தெந்த தேசத்தார்? இவர்களிருக்கும்படியான இடம் எப்படிப்பட்டது?

தகப்பனார்:—குழந்தைகளே! நாம் கடைவீதியில் பார்த்தவர்கள் எல்லோரும் நம்தேசத்தவர்களே; எல்லோரும் நம்மைப் போல இந்தியர்கள்தான். ஆனால் அவர்களுக்கும் நமக்கும் நடை, உடை, பாவனை, ஆசாரம், பாஷை முதலியவைகளில் வித்தியாசங்கள் உண்டு. ஏனெனில் அவரவர்களிருக்குமிடத்து நாகரிகம் முதலியவைகள் அவரவர்கள் வசிக்கும் இடத்தைச் சுற்றியுள்ள இயற்கையமைப்பை ஒட்டியிருக்கிறது. இவைகளைச் செவ்வனே தெரிந்துகொள்ள இந்தியாவின் இயற்கையமைப்பைப்பற்றி சுருக்கமாய் சொல்லுகிறேன். கவனியுங்கள்.

இப்படத்தைப் பாருங்கள். இதுதான் இந்தியா தேசம். இதற்கு வடக்கே இமாலயமலை இருக்கிறது. இமயமலையில் பனி அதிகம்; அதனால்தான் இதற்கு இமாலயமலை எனப் பெயர். இம்மலையிலிருந்து அநேக நதிகள் உற்பத்தியாகின்றன. அவைகளில் முக்கியமானவை கங்காநதி, ப்ரமபுத்திரா நதி, ஸிந்துநதி. இவைகள் பாயும் பூமிக்கு ஹிந்துஸ்தானம் என்று பெயர்; இதற்குத் தெற்கிலுள்ளது மத்திய இந்தியா,




தக்ஷிணப்பீடபூமிகள். தக்ஷிணத்தின் மேற்கிலிருப்பது மேற்குத் தொடர்ச்சிமலை ; கிழக்கிலிருப்பது கிழக்குத் தொடர்ச்சிமலை, தெற்கில் சமுத்திரம்

மேற்குத் தொடர்ச்சிமலைக்கும் அராபிகடலுக்கும் மத்தியிலிருக்கும் பிரதேசத்திற்கு மேற்குக் கரைநாடு என்று பெயர்.

கிழக்குத் தொடர்ச்சிமலைக்கும் வங்காள குடாக்கடலுக்கும் மத்தியிலிருக்கும் பூமிக்கு கிழக்குக் கரைநாடு என்று பெயர். இவ்விரண்டு நாடுகளும் ஹிந்துஸ்தானமும் செழிப்புள்ளவை கள். மேலே சொல்லிய பிரதேசங்கள் இயற்கை அமைப்பில் வேறுபட்டு இருப்பதால் அவ்வவ்விடத்து ஜனங்களின் நாகரி கம் முதலியவைகள் வித்தியாசப்படுகின்றன.

ராமன்:—அப்பா! சரி, இவர்களெல்லாரும் எந்தெந்த ஜாதியார்கள்? அவர்களுடைய மதம், பேசும் பாஷைகளின் பெயர் முதலியவைகளைக் குறித்து தயவுசெய்து சொல்லுங்கள்.

தக:—குழந்தைகளே! இன்றைதினம நாம பார்த்தவர் களில் சிலர் ஆரியர்கள் அவர்கள் பேசும் பாஷை சம்ஸ்கிரு தத்தைப்போலிருக்கும இன்னும் சிலர் திராவிடர்கள். இவர் கள் பேசும் பாஷை தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்ன டம்; இவர்களுடைய மதம இந்துமதம்.

கம:—அப்பா! ஆரியர்கள் என்று சொன்னீர்களே! அவர்களைப்பற்றி சொல்லுங்கள்.

தக:—குழந்தைகளே! நாளைதினம் உங்களுக்கு ஆரியர் களைப்பற்றி சொல்லுகிறேன்

## 2. ஆரியர்கள்.

தகப்பனார்:—குழந்தைகளே! நேற்று நீங்கள் கேட்ட ஆரியர்களைப்பற்றி சொல்லுகிறேன் இவர்கள் இந்தியாவிற்கு வருவதற்குமுன் மத்திய ஏஷியாவிலிருந்தார்கள். அவர்க ளுடைய ஜனத்தொகை அதிகரிக்கவே வேறு தேசங்களுக்கு அவர்கள் போகவேண்டியதாயிற்று. இமாலயமலையண்டை சில கணவாய்களிருக்கின்றன அவ்வழிகள் மார்க்கமாய் அவர் களில் அநேகர் இந்தியாவிற்கு வந்தார்கள். இங்கு வந்தபின் இத்தேசம் அவர்களுக்கு அநுகூலமாக விருந்தமையால் அவர் கள் இங்கேயே தங்கிவிட்டார்கள். அவர்கள் வழங்கிவந்த பாஷை ஸம்ஸ்கிருதம்.

அவர்கள் பார்வைக்கு வெகு அழகு பொருந்தியவர்கள். யுத்தம் செய்வதில் வீரர்கள். வியவசாயம், கைத்தொழில்

முதலியவைகளில் பேர்போனவர்கள் சமஸ்கிருதபாஷையில் அநேக சிறந்த கீதங்களைப்பாடி யிருக்கின்றார்கள் அவர்களுக்குள் ஜாதிவித்தியாசமேயில்லை ஆரியஸ்திரீகளில் அநேகர் கல்வியபயின்று அநேக கீதங்களையும் பாடியிருக்கிறார்கள். இவர்கள் இந்தியாவில் முதலில் பஞ்சாபில் குடி ஏறினார்கள் சிறிது காலத்துக்கப்பால் ஜனத்தொகை அதிகரிக்கவே பஞ்சாபுக்கு கிழக்கேயுள்ள கங்கா, யமுனா தீரங்களில் குடியேறினார்கள். இவர்கள் ஏற்கனவே, நாகரிகமுள்ளவர்களானதால் இங்கு வாதரும மிதிலை முதலிய இராஜ்யங்களையும், அயோத்தியா முதலிய வெகு அழகான பட்டணங்களையும் உண்டாக்கினார்கள்.

இவர்கள் ரிக்வேதங்களில் சொல்லியிருக்கிற இந்திரன், வருணன், வாயு, அக்னி முதலிய தேவர்களைத் தொழுது வந்தார்கள் பயிர் அபிவிருத்தி செய்வதற்குப் போதுமான மழை யுண்டாக இவர்கள் இந்திரனை தியானம் செய்துவந்தார்கள். வியாதியுள்ளவர்களும் துன்பப்படுபவர்களும் தங்கள் கஷ்டங்கள் நீங்கும் பொருட்டு அசுவினி தேவர்களைத் தொழுது வந்தார்கள்

அடியில் வரும் கதையை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். 'உபமன்னியு என்பவர் தமது குருவார்த்தையைச் சிரமேற் கொண்டு அன்னாகாரமின்றி பசுமாடுகளைத் தினம் பசுமையான புல் நிறைந்த மைதானத்திற்கு ஓட்டிக்கொண்டு போவார் நான்கு ஐந்து நாளாக பசியால் வருந்தி ஒருநாள் எருக்கஞ்செடியின் இலைகளைப் புசித்தார். தாகமதிகரித்தது. வேறொரு இடத்தில் ஒரு பசுமையான செடியிருந்தது. அதிலுள்ள இலைகளைத் தின்றார். அந்த இலைகளின் ரசம் இவர் கண்பார்வையைக் கெடுத்துவிட்டது உபமன்னியு "ஐயோ, கண்கள் தெரியவில்லையே என்று விசனப்பட்டுக்கொண்டு" இருளில் குரு வீட்டிற்குப் புறப்பட்டார். வழியில் ஒரு கிணற்றில் விழுந்துவிட்டார்.'

இவருடைய குரு, இவர் இன்னும் வராததைக்கண்டு விசனப்பட்டார் உடனே காட்டுக்குப்போனார் "உபமன்னியு! எங்கேயிருக்கிறாய்" என்று கூப்பிட்டார் "ஐயா! நான் இந்தக் கிணற்றிலிருக்கிறேன்," என்று கூவினார். எல்

லாவற்றையும் குரு தெரிந்துகொண்டு "அப்பா! அசுவினி தேவதைகளைக் குறித்து ஸ்துதிசெய்" என்றார். அவ்விதமே அவர் அத்தேவதைகளைக் குறித்து துதிசெய்தார் அசுவினி தேவதைகள் உடனே இவர் முன்வந்து, 'உனக்கு என்ன வரம் வேண்டும்' என்றார்கள். எனக்கு கண்பார்வை தெரிய வேண்டுமென்றார். அவ்விதமே தெரியும் என்று சொல்லி மறைந்தனர்

இவர்கள் இன்னும் சூரியன், சந்திரன் முதலிய தேவர்களையும் வணங்கிவந்தார்கள் ஆகையால்தான் சிலரைச் சூரியகுலத்தவரென்றும், மற்றும் சிலரைச் சந்திரகுலத்தவரென்றும் சொல்லுகிறார்கள். சூரிய குலத்தவருடைய சரித்திரம் ராமாயணம் என்ற இதிஹாஸத்தினின்றும், சந்திரகுலத்தவருடைய சரித்திரம் மகாபாரதம் என்ற இதிஹாஸத்தினின்றும் நன்கு விளங்கும்

**குழந்தைகள்:**—அப்பா! ராமாயணம், மகாபாரதம் இவைகளைச் சுருக்கமாய் எங்களுக்குச் சொல்லுங்கள்.

**தக:**—சரி, நாளை தினம் சொல்லுகிறேன். நாழிகை ஆய்விட்டது, நித்திரை செய்யப்போங்கள்



## 3. ராமாயணம்.

குழந்தைகளே! அநேக வருஷங்களுக்குமுன் அயோத்திமா நகரில் தசரதர் என்ற சக்ரவர்த்தி ஆண்டுவந்தார் அவர் மிக்க பேர்பெற்றவர் அவர் சூரியகுலத்தில் உதித்த இக்ஷுவாகு வம்சத்தவர்

இவருக்கு **கௌஸல்யை, கைகேயி, சுமித்திரை** என்ற மூன்று மனைவிகளிருந்தார்கள் கௌஸல்யையின் குமாரன் **ராமர்**, கைகேயின் புத்திரன் பரதன், சுமித்திரையின் பிள்ளைகள் லக்ஷ்மணனும் சத்துருக்கினனுமாம். இந்த நான்கு ராஜகுமாரர்களும் கற்கவேண்டிய வித்தைகளைக் காலா காலத்தில் பயின்று தேர்ச்சியடைந்தார்கள்.

ஒருநாள் மகா தபஸியாகிய விஸ்வாமித்திர ரிஷி தசரதரைப் பார்க்கவந்தார் தசரதர் அவரை வணங்கி, உமக்கு

என்ன வேண்டுமென்று கேட்டார். அவர், "மகாராஜாவே! என் யாகத்திற்கு கெடுதி யொன்றும் வராமல் தடுக்க உமது குமாரராகிய ராமரை அனுப்பக் கோருகிறேன்" என்றார்.

அப்பொழுது ராமருக்கு வயது பதினாறு. தசரதருக்குத் தம் இளங்குமாரரை அனுப்ப விருப்பமில்லை. அச்சமயம் அவருடைய குலகுருவாகிய வசிஷ்டர் அவரை அனுப்ப வேண்டிய தவசியந்தான் என்று சொன்னார்.

உடனே தசரதர் சம்மதித்தார். விசுவாமித்திரர் ராமரையும் அவரைப் பிரியாத லக்ஷ்மணரையும் தம் ஆச்சிரமத்திற்கு அழைத்துச் சென்றார் வழியில் தாடகி என்ற ராக்ஷத ஸ்திரீயைக் கொன்றார். பின்பு விசுவாமித்திரர் யாகம் செய்யத் தொடங்கினார் தாடகியின் குமாரர்களாகிய மாரீசன், சுபாகு என்ற ராக்ஷதர்கள் யாகத்திற்குக் கெடுதி செய்தார்கள். உடனே ராமர் மாரீசனைத் தண்டித்தார், சுபாகுவைக் கொன்றார் யாகம் முடிந்தது

அப்பொழுது மிதிலா தேசத்துக்கு அரசனாகிய ஜனகன் தன் பெண்ணாகிய ஸீதைக்கு விவாகம் செய்ய ஒரு ஏற்பாடு செய்தார். அதற்கு பற்பல தேசத்து மன்னர்களை வரவழைத்திருந்தார். ஸ்ரீராமரும் லக்ஷ்மணரும் விசுவாமித்திர மகாரிஷியுடன் அங்கு வந்திருந்தார்கள். தன்னிடமிருந்த அபூர்வ வில்லை வளைப்பவருக்குத் தம் பெண்மணியை விவாகம் செய்விப்பதாக ஜனகமகாராஜன் சபையிலுள்ள யாவருக்கும் தெரிவித்தார்

அநேகர் முயன்றார்கள் ஜயமடையவில்லை. ஸ்ரீராமர் தைரியத்துடன் சென்று அவ்வில்லை எடுத்து ஒரு கையால் வளைத்து மற்றொரு கையால் நாணேற்றினார் வில் ஒடிந்தது ராமர் அவ்விதம் செய்து ஜயமடைந்தமையால் ஜனகர் ஸீதையை ராமருக்கு மணம்புரிவித்தார். முறையே லக்ஷ்மணன், பரதன், சத்ருக்கனன் முதலியவர்களுக்கும் விவாகம் நடந்தது.

சிறிதுகாலஞ் சென்றபின்பு தசரதர் ராமருக்குமுடி சூட்ட நிச்சயித்தார். அவருடைய சிறிய தாயாராகிய கைகேயிக்கு மாத்திரம் அது சம்மதமில்லை. ஒரு சமயம் தசரதர் கைகேயி கேட்கும்போது இரண்டு வரங்களை அளிப்பதாகச் சொல்லி

யிருந்தார். இப்பொழுது கைகேயி தமது கணவரைப்பார்த்து "பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கவேண்டும் என்றும் ராமனை பதினான்கு வருஷகாலம் காட்டிற்கு அனுப்பவேண்டும்" என்றும் கேட்டாள்

தசரதர் பொய் பேசாதவர், சத்தியம் தவறாதவர்: ஆகையால் கைகேயி கேட்டபடி செய்தார்.

ராமரோ தகப்பனாரதுவார்த்தையை மீறி நடக்கமாட்டார். அவர் இஷ்டப்படி வனத்துக்குப் புறப்பட்டார் இவருடைய சகோதரர் லக்ஷ்மணரும் கூடச்சென்றார். ஸீதையும் 'ஐயா, நானும் தங்களுடன் காட்டிற்கு வருவேன் தாங்கள் வனத்திற்குப் போகும்பொழுது நான் சுகமாய் இங்கு இருக்கமாட்டேன்' என்று உறுதியாகச் சொன்னாள். யாவரும் காட்டிற்குப்போனார்கள்.

பரதனுக்கு இவ்விஷயம் சிறிதும் பிடிக்கவில்லை. பிரஜைகளும் மிகவும் விசனப்பட்டார்கள். தசரதர் இவ்விசனத்தால் உயிர் துறந்தார். பரதன் காட்டிற்குச் சென்று ராமரை திரும்பி வரும்படி பலமுறை வேண்டிக்கொண்டார். ராமர் "அப்பா! பரதா! நமது தகப்பனார் வார்த்தையை மீறி நடப்பது அதர்மம். நான் பதினான்கு வருஷமானவுடன் திரும்பிவருகிறேன். நீ அரசு புரிந்துகொண்டிரு" என்றார். கடைசியாக பரதன் விடைபெற்று ராஜ்யத்தை ராமருக்குப் பதிலாக சிம்மாஸனத்தில் உட்காராமல் ஆண்டுவந்தான்

ராமர் தண்டகாரண்யத்தில் அதிககாலம் சஞ்சாரம் செய்து வந்தார். பின்பு கோதாவரி தீரத்தில் (நாஸிக்) பஞ்சவடியில் வசித்துவந்தார். அச்சமயத்தில் சூர்ப்பனகை என்ற ராட்சத ஸ்திரீ ராமரையும் லக்ஷ்மணரையும் கண்டு 'ஐயா! உங்களில் எவராவது ஒருவர் என்னை மணம் புரியுங்கள்,' என்று கேட்டாள். இவர்கள் எவ்வித சமாதானம் சொல்லியும் அவள் கேட்கவில்லை. இவளை லக்ஷ்மணர் தண்டித்தார் அவளுக்கு கோபம் உண்டாயிற்று உடனே தனது தமையனாகிய ராவணனிடத்தில் முறையிட்டாள் ராவணன் லங்கைத் தீவுக்கு அரசன். இவன் மிக்க பலசாலி. சூர்ப்பனகை சொன்னதைக் கேட்டதும் ஸீதைக்கு விவாகம் ஏற்படுத்தியகாலத்தில் தனக்கு உண்டான அவமானம் நினைவுக்கு வந்தது.

ராவணன் கோபா வேசத்துடன் பஞ்சவடிக்கு வந்தான். ராமரும் லக்ஷ்மணருமில்லாத சமயத்தில் ஸீதையை எடுத்துக்கொண்டுபோய் தன்னை மணம் புரியும்படி அவளை வேண்டினன் ஸீதை மிக்க வருந்தினள் ராவணனை இகழ்ந்துபேசினள் அவன் செய்த காரியம் பிசகென்றும் தர்மமல்லவென்றும் கடுமையாகசசொன்னாள். ஆகையால் ராவணன் ஸீதையை இலங்காபுரியிலுள்ள அசோகவனத்தில் வைத்தான். ஸீதையோ துக்கித்துக்கொண்டு "ராமரை எப்பொழுது காண்பேன்" என்று நினைத்துக்கொண்டிருந்தாள்.

ராமரும லக்ஷ்மணரும் ஸீதையைக் காணமல விசனமுற்று அவளைததேட ஆரம்பித்தார்கள். ராவணன் இலங்காபுரிககு ஸீதையைக் கவர்நது சென்ற சங்கதி தெரிநதது உடனே இருவரும ராமேஸ்வரத்துக்குச் சென்று இங்கிருநது இலங்கைவரைக்கும அணை கட்டினார்கள். பின்பு இவர்கள் இலங்காபுரிக்குச் சுலபமாகப் போனார்கள்.

ராவணனுடன் ராமரும் லக்ஷ்மணரும் யுத்தம புரிநதார்கள். ராமர் அவனைக் கொன்றார் ராமர் லக்ஷ்மணருடன் ஸீதையைக் கூட்டிக்கொண்டு திருமபிவந்தார்

இப்பொழுது பதினன்கு வருஷம ஆய்விட்டது ஆகையால தமது அயோததிக்கு வநதார். பரதன் மிக்க மகிழ்நது ராமரையும, ஸீதையையும், லக்ஷ்மணரையும் அன்புடன் வரவழைத்து மரியாதை செய்தான். ராமருக்கு பட்டாபிஷேகம வெகு சிறப்பாக நடநதது.

கம :—அப்பா! ஸீதை மறுபடியும் ஸ்ரீராமரைச் சேர்நதது எனக்கு மிகுநத சநதோஷததை யுண்டாக்குகிறது

தக :—ஆம், ஸீதையோ மகா பதிவிரதை.

கோபாலன் :—அப்பா! பரதன் ராமரை அயோத்திக்குத் திருமபிவா வென்று கெஞ்சிக் கேட்டபொழுது அவர் போயிருநதால் இக்கஷ்டங்கள் உண்டாயிருக்காதல்லவா?

தக :—குழநதைகளே! அவர் தம் தந்தையின் வார்த்தையை நிறைவேற்ற கடமைப்பட்டவராகையால் திரும்பிப் போகவில்லை நாளைதினம் மகாபாரதக் கதை சொல்லுகிறேன்.

# 4. மகாபாரதம்.

குழந்தைகளே!—இராமாயணம் நிகழ்ந்த அநேக வருஷங்களுக்குமுன்பு ஹஸ்தினாபுரியில் சந்திரகுலத்தில் உதித்த பரதர்கள் அரசுபுரிந்துவந்தார்கள். ஹஸ்தினாபுரி இப்பொழுது நம் இந்தியாவுக்கு முக்கியபட்டணமாகிய டெல்லிக்கு சுமார் அறுபது மைல் தூரத்திலிருந்தது. இப்பரதர்களில் விசித்திர வீரியன் என்ற அரசன் ஒருவனிருந்தான இவனுக்கு திருதராஷ்டிரன், பாண்டு என்ற இரண்டு குமாரர்கள் திருதராஷ்டிரன் பிறவிக்குருடன் ஆகையால் பாண்டு அரசு புரிந்துவந்தார். பாண்டுக்கு யுதிஷ்டிரன், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் ஐந்து புத்திரர்கள உண்டு இவ்வைந்து பேரையும பஞ்சபாண்டவாகளென்று சொல்வதுண்டு. திருதராஷ்டிரனுக்கு துரியோதனன் முதலிய நூறு புத்திரர்கள

பாண்டுவின் புத்திரர்கள் யோக்கியாகள் வீரத்தன்மை. குரு தெய்வபக்தியுள்ளவர்கள சத்தியந்தவறாதவாகள துரியோதனனோ பொறாமை குணமுள்ளவன. அதிக பேராசையுள்ளவன். மரியாதையில்லாதவன் கெட்ட எண்ணமுடையவன் ஆகையால் பாண்டவர்களை துரியோதனனும் அவன் தம்பிமார்களும் வெறுத்துவந்தார்கள் மேலும படிப்பு விஷயத்திலும் பாண்டவர்கள் வெகு துரிதத்தில விலவித்தை முதலியவைகளை வெகு நன்றாகக் கற்று திறமையுடன் பழகிவந்தார்கள். துரியோதனனுக்கு அவவிதம கற்றுக்கொள்ள சக்தியில்லை. இதனாலும பொறாமையும துவேஷமும அதிகரித்தன பாண்டுமகாராஜன் இறந்துவிடவே, திருதராஷ்டிரன் தமது பிள்ளைகளுடன் தன் தம்பியின் குமாரர்களைப் பாதுகாத்துவந்தான்

எல்லோரும் துரோணாச்சாரியரிடம் விலவித்தை கற்றுக் கொண்டுவந்தார்கள் ஆனால் அர்ச்சுனன் வில்வித்தையில் சமர்த்தனானான் இவனைப்போல் ஒருவரும வில்வித்தையில் கைத்தேறவில்லை. பீமனோ மிகவும பலமுடையவன். துரியோதனனும் அவன் தம்பிமார்களும், பாண்டவர்களும் ஒரு சமயத்தில் அஸ்திரசஸ்திர, பந்தயம் வைத்தார்கள் அர்ச்சுனன் ஜயம்பெற்றான். துரியோதனனுக்கு உண்டான பொறா

மைக்கு அளவேயில்லை எவ்விதமாயாவது பாண்டவர்களைக் கொன்றுவிட வேண்டுமென்று பல சூழ்ச்சிகளைச் செய்தான். கடைசியாக இவர்களிருக்கும் மாளிகையில் நெருப்புவைத்து விட்டான் இவர்கள் தெய்வாதீனமாய் உயிர் தப்பி பிழைத தார்கள்.

சிறிதுகாலம் இவர்கள் மாறுவேஷம் தரித்துக்கொண்டு தேசமெங்கும் யாத்திரை செய்தார்கள். அப்பொழுது பாஞ் சால தேசத்து ராஜா தன்னுடைய மகளாகிய திரௌபதியின் சுயம்வரத்துக்கு அநேக ராஜகுமாரர்களை வரவழைத்தார். இச்சங்கதியைக்கேட்ட மாறுவேஷம்பூண்ட பஞ்சபாண்ட வர்களும் அங்கு போனார்கள். பாஞ்சாலராஜன் தன் குமா ரத்தி வில்வித்தையில் அற்புதமான செய்கையைச் செய்பவ னுக்கு மாலையிடுவாள் என்று சபையிலுள்ளோருக்குத் தெரி வித்தான்

பிராமணவேஷம் பூண்ட அர்ச்சுனன் காண்பித்த வில் திறமை நிகரற்றதாயிருந்தது. ஆகையால் திரௌபதி அர்ச் சுனனுக்கு மாலையிடவேண்டியதாயிற்று. திரௌபதி தனக்கு மாலையிடுவதற்குமுன் அர்ச்சுனன் தனக்கு மதிப்பு உயர்ந்த பொருள் ஒன்று கிடைத்ததாகத் தன் தாயாரிடத்தில் சொன் னான் 'அதை நீங்கள் ஐந்துபேரும் பங்கிட்டுக்கொள்ளுங் கள்' என்று தாயாராகிய குந்திதேவி கூறினாள். ஆகை யால்தான் திரௌபதி பஞ்சபாண்டவர்க ளெல்லோருக்கும் மனைவியாயிருக்கும்படி நேரிட்டது

கம :—அப்பா! இது நியாயமா?

தக :—கமலம்! குந்திதேவிக்கு அர்ச்சுனன் கொண்டு வந்த மதிப்பு உயர்ந்த பொருள் திரௌபதி என்று தெரிந் திருந்தால் "ஐவரும் பங்கிட்டுக்கொள்ளுங்கள்" என்று கூறியிருக்கமாட்டாள். ஆனால் அவ்விதம் குந்திதேவியார் சொல்லிய பின்பு அவ்வாறே புத்திரர்கள் தாய் வார்த்தைப்படி நடப்பது ஆர்யதர்மம்.

பஞ்சபாண்டவர்கள் திரௌபதியை மணம் புரிந்தபிறகு தங்களுடைய பெரிய தகப்பனாரை இராஜ்யத்தில் ஒருபாகம் கேட்டார்கள்.

துரியோதனனுக்கு அது பிடிக்கவில்லை திருதராஷ்டிர னுக்கோ கொடுக்காமலிருக்க முடியவில்லை. பஞ்சபாண்டவர் கள் அழகில் மிகச் சிறந்த இந்திர பிரஸ்தம் என்ற பட்ட ணத்தைக் கட்டி மனுநீதிதவறாமல் அரசுபுரிந்துவந்தார்கள்.

இந்திர பிரஸ்தத்தின் அழகையும், அவ்வூர் ஜனங்கள் பஞ்சபாண்டவர்களிடத்தில் வைத்திருந்த மதிப்பையும் அன் பையும், கண்டு துரியோதனன் பொறாமைகொண்டான். இன் னும் துரியோதனன் இந்திர பிரஸ்தத்திற்கு வந்திருந்த பொழுது தன் புத்தியீனத்தால் அவமானமடைந்தான். இத னல் அவனுக்கு ஏற்கனவேயிருக்கும் பொறாமை அதிகரித் தது. உடனே அவன் பஞ்சபாண்டவர்களை நிர்மூலமாக்கி விடவேண்டுமென்று தீர்மானித்தான்.

பஞ்சபாண்டவர்களில் யுதிஷ்டிருக்கு (தருமருக்கு) சொக்கட்டான் ஆடுவதில் வெகுபிரியம் இதைத் தெரிந்து கொண்ட துரியோதனன் பஞ்சபாண்டவர்களை ஒருநாள் ஹஸ்தினபுரிக்கு வரவழைத்து சொக்கட்டான் ஆட்டத்தைப் பந்தயம் வைத்து ஆடும்படியாகச் செய்தான். அதில் நாடு நகரம் முதலியவற்றைப் பாண்டவர்கள் இழக்கும்படி நேர்ந் தது. பிறகு பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் காட்டில் வாசம் செய்து பதின்மூன்றாவது வருஷம் எவரும் இவர் களைக் கண்டுபிடியாமல் காலங்கழித்து வந்தால் இவர்களுக்கு இவர்களுடைய ராஜ்யத்தைத் திருப்பிக்கொடுப்பதாய் திருத ராஷ்டிரன் வாக்களித்தான்

அவ்விதமே பாண்டவர்கள் செய்து முடித்தனர். பின்பு தங்களுக்கு தங்கள் இராஜ்யத்தைக் கொடுக்கும்படி திருத ராஷ்டிரரைக் கேட்டார்கள். அவர் துரியோதனனுடைய வார்த் தையைக் கேட்டு திருப்பிக்கொடேன் என்று சொன்னார். பாண்டவர்கள் எவ்வளவோ நல்ல வார்த்தைகளால் மரியா தையாய் கேட்டுப் பார்த்தார்கள் ராஜ்யமுழுவதும் கொடா விட்டாலும் அதில் ஒரு சிறு பாகத்தையாவது கொடுங்கள் என்று திருதராஷ்டிரரை மிக்க வணக்கத்துடன் கேட்டுப்பார்த் தார்கள். அதற்கும் அவர் சம்மதிக்கவில்லை. ஆகையால் மகா பாரத யுத்தம் ஆரம்பமாயிற்று. இது பதினெட்டு நாள் நடந் தது. இருதிறத்தாரும் நானாவித சிறந்த அஸ்திரங்களையும்,

சஸ்திரங்களையும் சாஸ்திர முறைப்படி உபயோகித்து நியாய மான யுத்தம் புரிந்தார்கள்.

பாண்டவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணன் உதவியும் அநுக்கிரக மும் அதிகமாயிருந்தபடியால் அவர்கள் ஜயமடைந்தார்கள். பிறகு யுதிஷ்டிரர் தங்களுடைய மூதாதையர் ஆண்டுவந்த ராஜ்யமுழுவதையும் பெற்றார்.

குழந்தைகள் (எல்லோரும்) அப்பா! தர்மத்தையே விரத மாகக்கொண்ட பாண்டவர்கள் ஜயமடைந்த விஷயத்தில் எங் களுக்கு சந்தோஷமுண்டாகிறது.

தக:—அதற்குத் தடையென்ன? தர்மம் தலைகாக்கு மன்றோ?

இராமாயணம், மகாபாரதம் இவைகள் நிகழ்ந்த காலத்தில் தர்மமே மேலிட்டிருந்தது. இதற்குப் பின்பு அதர்மம் பெருக ஆரம்பிக்கவே, பாமர ஜனங்களின் கதி அதோகதியாயிற்று.

ராமன்—அப்பா! இப்பாமர ஜனங்களின் அதோகதியை நீக்க எவரும் முன்வரவில்லையா?

தக:—குழந்தைகளே! கேளுங்கள், புத்தர் என்ற ஒரு மகான் அவதாரம் செய்து அவர்களுடைய கஷ்டங்களை நீக்க முயன்றார். அவருடைய சரித்திரத்தை நாளை தினம் சொல்லுகிறேன்.



## 5. புத்தர்.

**தக:**—'குழந்தைகளே! **நேபாளத்திற்குச்** சமீபத்தில் **கபில வஸ்து** என்னும் இடத்தில் **கௌதம** குலத்தைச்சேர்ந்த **சித்தார்த்தர்** என்பவர் ஒருவர் பிறந்தார். இவர் **சுத்தோதனன்** என்ற ராஜாவின் பிள்ளை. இவர் புத்திசாதுர்யமுடையவர் ஆகையால் படித்துச் சகல விஷயங்களையும் கற்றுக்கொண் டார். வேட்டையாடப் போவார். யுத்தப் பயிற்சியிலும் இவர் வல்லவர்.

இவருக்கு விவாகம் நடந்தது. வேறொரு தேசத்து ராஜா வின் குமாரத்தி இவருக்கு மனைவியானாள். கௌதமருக்கு ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு **ராகுலன்** எனப் பெயரிட்டு வளர்த்துவந்தார்கள்.

கௌதமா வீண் டம்பக்காரரல்ல. பணம அதிகம் சமபா திக்க வேண்டும் என்ற விருப்பமும் இவருக்கு இல்லை. சுக வாழ்வும் இவர் மனதுக்குப் பிடிக்கவில்லை. தாழ்ந்த வகுப்பார் படும் கஷ்டங்களைக் கண்டு வருந்தினர். ஏழைகளிடத்தில் மிக்க அநுதாபம் காட்டிவந்தார் இவ்வித நற்குணங்க ளமைந்த கௌதமர் இப்பிறவியின் உண்மையை அறியவேண்



புத்தா

டுமென்று மகத தேசத்துக்கு முக்கிய பட்டணமாயிருந்த ராஜகிருகம் என்னும் இடத்திற்குவந்து வேதாந்தம் படித்தார். ஆனல் அவருக்கு அந்த உண்மை விளங்கவில்லை.

பின்பு அகோர தபசு செய்தார். தாம் செய்த தபசும் பிர யோசனமற்றது எனத் தெரிந்துகொண்டார். பின்பு புத்த

கயாவில் ஒரு விருக்ஷத்தின்கீழ் உட்கார்ந்துகொண்டு த்யானம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது அவருக்கு அவர் நாடிய உண்மை வெளிப்பட்டது.

அதாவது மனித வர்க்கத்துக்கு பிறப்பு இறப்பு ஒன்றும் இல்லாமல் மோக்ஷம் வேண்டுமானல் தபசும் தேவையில்லை, யாகங்களும் தேவையில்லை, பலியும் தேவையில்லை. நற்குணம், பரிசுத்தமான வாழ்வு, தர்மம், அன்பு, தப்பு செய்தவர்களை மன்னிப்பது, ஜாதிபேதம் பாராட்டாமல் எல்லாச் சமயங்களையும் சமமாய் எண்ணுவது, தன்னைப்போல் பிறரை நேசிப்பது. ஜீவஹிம்சை செய்யாமலிருப்பது, உண்மையையே பேசுவது, மதுபான விலக்கு முதலியவைகளே அவசியமானவைகள் என்று அறிந்துகொண்டார்.

உடனே வீடுவாசல், பிள்ளை, பெண்டிர், சுற்றத்தார், ராஜ்யம் முதலியவைகளை விட்டுவிட்டு ஊர் ஊராய்ச் சென்று மேற்கூறிய நீதிகளையே ஜனங்களுக்கும் போதித்துவந்தார். அநேகர் இவருக்குச் சிஷ்யரானார்கள். அவர்களைப் பற்பல இடங்களுக்கு அனுப்பித் தமது கொள்கையை உபந்நியாசம் செய்யும்படி சொன்னார். அநேகர், கௌதமர் கொள்கைப்படி நடந்தார்கள்.

இவ்விதம் இவர் செய்துவந்தமையால், இவருக்குப் புத்தர் எனப் பெயர் வழங்கிவந்தது. இவர் உண்டாக்கிய மதத்திற்குப் புத்தமதமெனப் பெயர் உண்டாயிற்று. சில இந்து ராஜாக்களும் இவர் மதத்தில் சேர்ந்து அதன்படி நடந்தார்கள். இவர் எண்பதாவது வயதில் மரணமடைந்தார். அச்சமயத்தில் இவர் மதம் இந்தியாவில் மாத்திரமல்ல, இலங்கையிலும் பரவியிருந்தது.

**குழ :—ராமன் :** — அப்பா! புத்தர் கதை நன்றாயிருக்கிறது ; இவருக்குப்பின் இவரைப்போல் பாமர ஜனங்களின் கஷ்டங்களை நீக்க வேறு எவராவது இருந்தார்களா ?

**தக :**—அநேகமா யிருந்ததாகத் தெரியவில்லை இருந்திருந்தாலும் அவர்கள் இவ்வேழை ஜனங்களுக்காக அதிகமாய் உழைப்பதற்கு சாத்தியப்பட்டிராது. ஏனெனில் இந்துஸ்தானத்தில் அதிக குழப்பமிருந்ததாகத் தெரிகிறது. இல்லா

விட்டால் ஐரோப்பியதேசத்து யுத்தவீரனாகிய மகா அலக்சாண்டருக்கு இந்தியாவின்மீது படையெடுக்க நேர்ந்திராது.

குழ :—அந்த மகா அலக்சாண்டருடைய சரித்திரத்தைக் கேட்க விரும்புகிறோம் ?

தக :—நாளை சொல்லுகிறேன்.

## 6. மகா அலக்சாண்டர்.

குழந்தைகளே ! ஐரோப்பாக் கண்டத்தின் தென்கிழக்கில் க்ரீஸ் என்ற தேசமிருக்கிறது அதில் ஒருபாகத்திற்கு மாஸிடோனியா வென்று பெயர். அதை ஆண்டுவந்தவர்களில் அலக்சாண்டர் என்றொருவரிருந்தார். அவர் யுத்தவீரர். மிக்க புத்திமான். அவா உலகத்திலுள்ள தேசங்களையெல்லாம் ஜயிக்கவேண்டுமென்ற விருப்பமுள்ளவர் இதற்காக ஏஷியாமைனர், பாரசீகம், ஆப்கானிஸ்தானம் முதலியவைகளை ஜயித்துக்கொண்டு இந்தியாவின் மீதும படையெடுத்து வந்தார் இச்சமயத்தில் இநதியா பல ராஜயங்களாகப் பிரிந்திருந்தது

இவைகளை ஆண்டுகொணடிருந்த ராஜாங்கள் ஒற்றுமையுடனில்லை ஒவ்வொருவரும் பொறாமைகொண்டிருநதனர் ; அதனால் அலக்சாண்டர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தபொழுது சிலருக்கு அவருடன் எதிர்தது யுத்தம் புரிய முடியவில்லை. ஆகையால் அவர்கள் அவருக்குக் கீழ்ப்படிந்து கப்பம் கட்டினார்கள்

புருஷோத்தமன் என்ற ராஜா ஜீலம் நதிக்கும் சேனப் நதிக்கும் மத்தியிலுள்ள பிரதேசங்களை ஆண்டுவநதார். அலக்சாண்டர் இங்குவந்தபொழுது புருஷோத்தமர் கப்பம் கட்டமாட்டேன் என்று வெகு தைரியமாகச் சொன்னார். அதன் மேல் இவருக்கும் அலக்சாண்டருக்கும் யுத்தம் நடந்தது புருஷோத்தமர் தோல்வி அடைந்தார். ஆயினும் மகா அலக்சாண்டர் புருஷோத்தமருடைய வீரத்தன்மையைக் கண்டு மிகவும் அவரைப் புகழ்ந்துபேசினார். அவர் அவருக்கு அவருடைய ராஜ்யத்தைக் கொடுத்ததல்லாமல் தாம் ஜயித்திருந்த

தேசங்களையும அவருக்கு கொடுத்தார் எல்லாவற்றிற்கும் தமக்கு கப்பம் கட்டும்படியும் ஏற்பாடு செய்தார்

பின்பு இவர் பஞ்சாபிலுள்ள நதிகளைத் தாண்டி மகதராஜ்யத்தை ஜயிக்கவேண்டுமென்று விரும்பினார் இவருடைய சைனியங்கள் தங்கள் வீடுவாசல்களை விட்டு வந்து வெகு நாட்களாயின அவர்கள் திரும்பிப் போகவேண்டுமென்று கேட்டபோதெல்லாம் அலக்சாண்டர் : " சற்று பொறுங்கள், சற்று பொறுங்கள் " என்று சொல்லிக்கொண்டே வந்தார் இவர்கள் ராவி நதிக்கரையடைந்ததும இன்னும் எவ்வளவு காலம் இப்படிப போகவேண்டியிருக்குமோ வென்று பயந்து, இனி முன்செல்ல யாட்டவேமாட்டோம் என்று ஒரே பிடிவாதமாய்ச் சொன்னாகள்

அலக்சாண்டர் யுத்த வீரராயிருந்தபோதிலும் என்ன செய்வார்? தாம் " நினைத்தபடி கடவுள் எண்ணம இல்லையே ", என்று விசனப்பட்டார தாம் கைப்பற்றிய நாடுகளில் தம் சேனாதிபதிகளை அதிகாரிகளாக நியமித்தபின் தமது ஊருக்குச திரும்பிவிட்டார தமது நகருக்கு வந்து சிறிதுகாலஞ் சென்றபின் இவர் இறந்தார

இவா இறந்தபின் அவ்வதிகாரிகளெல்லாம அந்த நாடுகளைத தங்கள் தங்கள் சுவாதீனப்படுத்திக் கொண்டார்கள் மேலும் இந்தியாவின் வடமேற்கிலும் அதற்கு சமீபத்திலும அலக்சாண்டர் கைப்பற்றிய நாடுகள் அவருடைய சேனாதிபதிகளிலொருவராகிய ஸெலியூக்கஸ் வசமாயின

ராமன் :— அப்பா ! ஸெலியூக்கஸ் க்ரீக் தேசத்தவர் ஆயிற்றே ! அலக்சாண்டரைப்போல் அவர் இந்தியாவில் ராஜ்யங்களை ஜயிக்க பிரயத்தனம் செய்யவில்லையா ?

தக:—குழந்தைகளே ! அவர் இந்தியாவில் ராஜ்யங்களை ஜயிக்க முயன்றார். ஆனால் அது பலிக்கவில்லை.

குழந்தைகள் :—(எல்லோரும்) ஏனப்பா ! (ஆச்சரியத்துடன் !)

தக :—மகததேசத்தை அப்பொழுது சந்திரகுப்தரென்ற ஒரு அரசர் ஆண்டுவந்தார் ஸெலியூக்கஸுக்கு அவர் முன் ஒன்றும் செய்யமுடியாமற்போயிற்று.

**கோபாலன்** :— சந்திர குப்தர் எவ்வாறு ஸெலியூக்கஸை மடக்கினார்? இன்னும் சந்திரகுப்தருடைய அரசாட்சியைப் பற்றி சொல்லுங்கள்.

**தக** :— நாளை தினம் சந்திரகுப்தரைப்பற்றி சொல்லுகிறேன்.



## 7. சந்திரகுப்தர்.

**தக** :— சந்திரகுப்தர் வீரபராக்கிரமமுள்ளவர். இவர் மகததேசத்து ராஜபரம்பரையைச் சேர்ந்தவர். அந்நிய தேசத்தார் அப்பொழுது இந்தியாவுக்குவந்து இராஜ்யங்களைக் கைப்பற்றுவது இவருக்குப் பிடிக்கவில்லை. இவர் மகததேசத்து உயர்ந்த ராஜவம்சத்தைச் சேர்ந்தவராயிருந்தும், இவர் தாயார் தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவள். இவள் பெயர் **மூரா**. இதனால் இவருக்குச் **சந்திரகுப்த** மௌரியன் என்ற பெயர் வழங்கி வந்தது.

ஆனதுபற்றி இவரை இவருடைய உறவினர் இகழ்ச்சியாகப் பாராட்ட ஆரம்பித்தனர். இவரும் சிறுபிராயத்தில் **மஹாபத்ம நந்தன்** என்ற மகததேசத்து அரசரை விரோதம் செய்துகொண்டார். இதனால் அந்த நந்தர் இவரை மகத தேசத்தை விட்டுத் துரத்திவிட்டார். சந்திரகுப்தர் சிறிது காலம் இந்தியாவின் வடமேற்கிலுள்ள வனம் வனாந்தரங்களிலிருந்து பெருத்த சேனையைச் சேகரித்துக்கொண்டிருந்தார்.

மகா அலெக்சாண்டர் இறந்தவுடன், சந்திரகுப்தர் தமது சேனையுடன் இந்தியாவுக்குவந்து க்ரீக் சைனியங்களைத் துரத்திவிட்டு **பஞ்சாப்பைக்** கைவசமாக்கிக் கொண்டார்.

இதன் இடையில் மகாபத்மநந்தர் மகததேசத்தை ஆண்டு வந்தார். இவரை அவ்வூர் ஜனங்கள் வெறுத்துவந்தார்கள். சந்திரகுப்தர் மகத ராஜ்யத்திற்குச் சென்று நந்தருடன் யுத்தம் செய்தார். அந்த யுத்தத்தில் அவர் நந்தரைத் தோற்கடித்து அவர் ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டு அவரையும் கொலை புரிந்தார். அவர் அத்தேசத்துக்கு முக்கிய பட்டணமாகிய **பாடலிபுரத்தில்** வசித்து அரசுபுரிந்து வந்தார்.

வடஇந்தியா ஒரே ஆளுகைக்குட்பட் டிருக்கவேண்டு மென்று சந்திரகுப்தர் எண்ணினார். இதற்காக இவர் அதன் மேல் படையெடுத்துச் சென்று அவ் வடஇந்தியா முழுவதை யும் ஜயித்தார். மேற்கூறிய வண்ணம் சந்திரகுப்தர் ராஜ்யங் களை ஜயித்துப் பலப்படுத்திக்கொண் டிருக்கையில், அலெக் சாண்டருடைய தளகர்த்தராகிய ஸெலியூக்கஸ் என்பவர் (Seleucus) அலெக்சாந்தர் ஜயித்த நாடுகளைக் கைவசமாக்கிக் கொள்ள, இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார்.

குழந்தைகளே! சந்திரகுப்தர், பலத்த சேனையைச் சேக ரித்து வைத்திருந்தாரல்லவா? சந்திரகுப்தருக்கு இச் சங் கதி தெரிந்தவுடன், அவருடன் யுத்தம்செய்யப் புறப்பட் டார். ஸெலியூக்கஸ் மிகவும் பயந்து, சந்திரகுப்தருடன் சமாதானம் செய்துகொண்டு, ஸிந்து நதிக்கு மேற்கேயுள்ள நாடுகளைச் சந்திரகுப்தருக்குக் கொடுத்தார். மேலும் தமது குமாரத்தியைச் சந்திரகுப்தருக்கு விவாகம் செய்துவைத்தார்.

சந்திரகுப்தருடைய மகாராஜ்யத்தில் ராஜதூதராக இருந் துவர மெகாஸ்தினீஸ்(Megasthenes) என்பவரை ஸெலியூக்கஸ் அனுப்பினார். மெகாஸ்தினீஸ் புத்திநுட்பமுடையவர்; உண் மையாய் உழைப்பவர். இவர் மகாராஜ்யத்தி லிருந்தமையால் சந்திரகுப்தருடைய அரசாட்சியைச் செவ்வனே கவனித்து வந்தார். சந்திரகுப்தர் அநேக பேர்பெற்ற அரசர்களைக்காட் டிலும் மிகச் சிறந்தவரென்றும், சாமர்த்திய முடையவரென்றும் அவர் எழுதியிருக்கிறார்.

சந்திரகுப்தர் பதினெட்டு வருஷகாலத்தில் க்ரீக் சைனி யங்கள் யாவற்றையும் பஞ்சாபிலிருந்தும் சிந்துநாட்டிலிருந் தும் துரத்திவிட்டார். சந்திரகுப்தருக்குச் சாணக்கியரென்ற பிராமணர் மந்திரியாயிருந்தார். இவர் தந்திரசாலி; ராஜாங்க விஷயத்தில் கைதேர்ந்த நிபுணர். இவருடைய புத்திமதியைக் கேட்டு இவர் ராஜ்யபாரம் செய்துவந்தார்.

இவருடைய சேனை பலப்பட்டு வந்தது. யுத்த வீரர்க ளுக்கு மாதம் மாதம் சரியாய்ச் சம்பளம் கொடுத்துவந்தார். அவர்களுக்கு குதிரை, ஆயுதங்கள், உடுப்பு முதலியவைகளை யும் அளித்துவந்தார். இவர்காலத்தில் 6-லக்ஷம் மனிதர் காலாட்படையிலும், குதிரைப்படையில் 30,000 பேரும்,

யானைப்படையில் 9,000 பேரு மிருந்தார்களென்றால் இவரு டைய சேனைபலத்தைக் கண்டு இதர ராஜாக்கள் பயப்பட கேட்பானேன்! வியாபாரம், கைத்தொழில், வியவசாயம் விருத்தியடைந்தன க்ரீக் தேசத்திற்கு இந்தியர்கள் போய் வர்த்தகம் செய்துவந்தார்கள். க்ரீக்கர்களும் இந்தியாவுக்கு வந்து வியாபாரம் செய்தார்கள். ஆனால் அவர்கள் சந்திர குப்தருடன் விரோதம் பாராட்டவில்லை

ரஸ்தாக்கள், நீர்ப்பாய்ச்சலுக்கு வேண்டிய சாதனம் முதலியவைகளையெல்லாம் செய்துவைத்தார். நிலவரி ஜனங்களுக்குச் சிறிதேனும் கஷ்டமின்றி வசூல் செய்யப்பட்டு வந்தது. இதன் வரும்படிதான் ராஜ்ய செலவுக்கு உதவிற்று.

இவரே சகல ராஜாங்க விஷயங்களைக் கவனித்துவந்தார். இவர் தம்மை ஜனங்கள் சுலபமாக நேரில் பார்த்து தங்கள் குறைகளைத் தெரிவிக்க ஏற்பாடுசெய்திருந்தார் இவர் காலத்தில் ஜனங்கள் அநீதிசெய்ய அஞ்சினார்கள்

இவர் விஸ்தாரமான தேசங்களை ஜயித்து ராஜ்யபரிபாலனம் செவ்வையாகச் செய்தமையால்தான் இவரை சரித்திரக்காரர்கள் புகழ்ந்து பேசியிருக்கிறார்கள்.

குழ:—அப்பா! மௌரிய வம்சத்தில் சந்திரகுப்தருக்குப் பின் அவரைப்போல் கீர்த்திபெற்ற அரசர்களிருந்தார்களா? இருந்திருந்தால் அவர்களைப்பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்.

தக:—அநேகரில்லை. ஒரே ஒருவர்தான் அதிக கீர்த்திமானாயிருந்தார். அவரைப்பற்றி நாளைதினம் சொல்லுகிறேன்.

## 8. அசோகர்.

தக:—சந்திரகுப்தருக்குப்பின் அவருடைய குமாரர் பிந்துஸாரர் அரசுபுரிந்துவந்தார் பிந்துஸாரர் அசோகருடைய தகப்பனார். அசோகர் குழந்தைப் பருவம் முதற்கொண்டு இரக்கமுள்ளவர்; மிகுந்த படிப்பாளி. பிந்துஸாரர் ராஜாவாயிருந்தபொழுது அசோகர் யுவராஜாவானார். ஏனெ

னில் இவருக்குப போதுமான சக்தியும் அரசுபுரியத் தகுந்த யோக்கியதையும் இருநதன

உயர்ந்த வகுப்பாரின் புததிரர்கள் **தாக்ஷஸீலம்** என்ற பட்டணததிற்குப் போய் அங்குள்ள கலாசாலையில் படிதது வநதாரகள். இது அசோகருடைய தகப்பனுரால் ஏற்படுத் தப்பட்டது

காஷ்மீரம, பஞ்சாப், ஸிந்து நதிக்கு மேற்கேயுள்ள மாகாணங்கள் பிந்துஸாரருக்குச் சொந்தமானவைகள். இவைகளுக்கு முக்கிய பட்டணம **தாக்ஷஸீலம்**. இதைச்சுற்றிலுமுள்ள இடங்கள் செழிப்பாயும ஜனநெருக்கமாயு மிருநதன.

பிநதுஸாரர் இறநதவுடன் அசோகர் பட்டததிற்கு வநதார். இவர், தமது பாட்டனுர், தகப்பனுர் ஜயிதத தேசங்களை ஆண்டு வந்தார்.

இவர் பட்டததிற்கு வநத பதின்மூன்முவது வருஷத்தில கலிங்கதேசததை ஜயிககச் சென்முர். கலிங்கதேசம வங்காள குடாக்கடல் ஓரம் மகாநதியிலிருந்து கோதாவரி நதிவரையிலும பரவியிருநதது. கலிங்கதேசததை ஜயிகக அசோகர் சென்றபொழுது, அநேக காலாட்படைகளும, குதிரைப் படைகளும உடன்கொண்டு சென்முர். இவர் அநதேசத்தைப் பிடித்துக்கொண்டார். ஆயினும இவர் சேனையில் அநேகர் உயிர் துறந்ததைக் கண்டு மிக்க வருநதினுர்.

இனி, பேராசைகொண்டு ராஜயங்களைப் பெற ஆசைப்படுவதில்லை எனத் தீர்மானஞ் செய்துகொண்டார். பின்பு, யுத்தம்புரியப் போகவுமில்லை. ஜனங்கள் மடியவுமில்லை. அவ்வளவு இரக்கமுள்ளவர் அசோகர் சண்டைசெய்து, ஜனங்களைக் கொன்று, ராஜயத்தை ஜயிப்பது ராஜாக்களின் கடமை என்ற கொள்கையை யாவரும் தங்கள் மனதிலிருந்து நீக்கிவிட வேண்டுமென்று சொன்னுர்.

இவர் ஆளுகையில் இவர் ராஜ்ஜியம் உந்நத ஸ்திதியிலிருந்தது. இவர் இப்பொழுது புத்தமதக் கொள்கையைக் கைப்பற்றினுர். ஜனங்களுக்கும் அதை விவரித்துச் சொல்லிவந்தார். இவர் தமது உறவினர்களையும் பௌத்த சமயத்தை நன்முய் தெரிந்துகொண்ட பண்டிதர்களையும் வெகு தூரதேசங்களுக்கெல்லாம் அனுப்பி புத்தசமயத்தைப் பரவச்செய்தார்

இவர் புத்தமதஸ்தராயிருந்தும் இதரமதஸ்தரை உபத்திரவப் படுத்தவில்லை. இவர் பாடலிபுத்திரத்திலிருந்து ஸ்தலயாத்திரை செய்து புத்தர் பிறந்துவளர்ந்த ஸ்தலங்களுக்குப் போனார்.



அசோகர் கட்டிவைத்த ஸ்தூபி

அங்கு ஒரு ஸ்தூபியில் 'புத்தர் மகான் பிறந்தவிடம்' என்று செதுக்கி அதை நாட்டினார். இவ்விதம் இவர் அநேக ஸ்தூபிகளை ஸ்தாபித்திருக்கிறார். அவைகள் இப்பொழுது மிருக்கின்றன.

அசோகர் கபிலவஸ்து என்கிற இடத்துக்கும், சாரநாத், காசி முதலிய இடங்களுக்கும் சென்றார். கடைசியாக குசி நகரத்திற்கு வந்து அங்குச் சிறிதுகாலம் தங்கியிருந்தார். இவர்

தர்மத்தை ஸ்தாபிக்கவும் அதர்மத்தை வேரோடு நீக்கவும் மிகவும் முயன்றார் யாவரும் தம்முடைய கோட்பாடுகளை எளிதில் தெரிந்துகொண்டு அவைகளின்படி நடக்கும்பொருட்டு தமது இராஜ்யத்தில் பல இடங்களில் கற்பாறைகளின்மீதும் இவர் ஸ்தாபித்த ஸ்தூபிகளின்மேலும் வரைந்துவைத்தார். அப்படி அவருடைய கோட்பாடுகளின்படி ஒழுகாதவர்களைத் தண்டித்துவந்தார் இவர் மிக்க ஜீவகாருண்ணியமுள்ளவர். ஜீவவதை அனியாயமாய்ச் செய்யக்கூடாதென்பது இவரது கொள்கை. ஆகையால் ஜனங்களுக்கு மாத்திரமல்ல ; வாயில்லா சகல பிராணிகளுக்கும் வைத்தியசாலைகளை ஏற்படுத்தினர். ஜனங்களுக்கு வேண்டிய நன்மைகளையெல்லாம் இவர் தகப்பனார் பாட்டனார் காலங்களில் அவர்கள் செய்ததைவிட அதிகமாகச் செய்துவந்தார் பிரஜைகள் எல்லோரும் அவரை வாழ்த்திக் கொண்டாடினார்கள். இவர் நாற்பது வருஷ காலந்தான் அரசாண்டார்.

குழ :—இந்த மௌரியகுலம் க்ஷீணம் அடைந்தபிறகு யார் அதிக புகழ்பெற்று இராஜ்யபாரம் செய்துவந்தார் ?

தக :—அவ்விஷயத்தை நாளைதினம் சொல்லுகிறேன்.

## 9 விக்கிரமாதித்தியன்.

தக :—மௌரியர் காலத்துக்குப்பின் குப்த வம்சத்தார் அதிக பிரபலமடைந்தார்கள். இந்த வம்சத்தில் புஜபல பராக்கிரமசாலிகளாயிருந்த அரசர்கள் அநேகர் உண்டு. இவர்களில் மிக பேர்போனவர் விக்கிரமாதித்தியர் அவர் சுமார் நாற்பத்தைந்து வருஷகாலம் உஜ்ஜினிமாநகரில் அரசு புரிந்துவந்தார். இவர் காலத்தில் அந்நியர்கள் இந்தியாவின் மீது படையெடுக்காமல் தடுத்துவந்தார். இவரது ராஜ்யம் விஸ்தாரமாயிருந்தது. இவர் கல்வி, கைத்தொழில் முதலியவைகளை விருத்தியடையும்படி செய்தார்.

விக்கிரமாதித்தியன் காலத்தில் கற்பாதைகளும், மரங்களும், ஆஸ்பத்திரிகளும், சாவடிகளும், சத்திரங்களும் அதிகம் ஏற்பட்டன. இவரைப்பற்றிப் பல ஆச்சரியமான கதை

கள் நமது தேசத்திலுள்ளவர்களுக்கு இப்பொழுதும் தெரியும் அவைகளை விக்கிரமாதித்தியன் கதை என்ற புத்தகத்தினின் றும் தெரிந்துகொள்ளலாம்

இவர் காலத்தில் மகாகவியாகிய காளிதாஸர் ஜீவித்திருந்த தாகத் தெரிகிறது. நவரத்தினங்கள் என்று பெயர்பெற்றுவந்த ஒன்பது வித்வான்களில் காளிதாஸர் ஒருவர். இவர் சாகுந் தலம் முதலிய நாடகங்களும், மற்றும் பல நூல்களும் இயற்றி யுள்ளார். இவற்றுள் அநேகம் தமிழிலும் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன. விக்கிரமாதித்தியன் அரசாண்டபொழுது (Fa-Hien) பாஹியென் என்னும் பௌத்த சந்நியாசி சீனதே சத்திலிருந்து இந்தியாவுக்கு வந்து பல ஊர்களைப் பார்த்தார். இவர், விக்கிரமாதித்தியன் வீரபராக்கிரம முள்ளவனென்றும், ராஜ்யபாரம் புரிவதில் சமர்த்தனென்றும், பிரஜைகள் சமாதா னத்துடன் பற்பல தொழில்களைச் செய்துகொண்டும் திரவியம் சம்பாதித்துக்கொண்டும் தனவந்தர்களாயிருந்தார்களென்றும், அவர்களுக்கு யாதொரு குறையுமில்லையென்றும் சொல்லி யிருக்கிறார்

விக்கிரமாதித்தியன் பிராமணர்களை மந்திரிகளாக வைத் துக்கொண்டு அரசுபுரிந்து வந்தார். இவர் விஷ்ணுபக்தர். ஆகையால் இவர் காலத்தில் புத்தமதம் க்ஷீணமடைய ஆரம் பித்தது. கயா, கபிலவஸ்து, குசிநகர் முதலிய விடங்களில் பௌத்த கோயில்களும் மடங்களும் கைவிடப்பட்டு அழிந்து கிடந்தன.

**குழ.—கமலா:**—'அப்பா! போஜராஜன் விக்கிரமாதித்தி யன் உட்கார்ந்திருந்த சிம்மாசனத்தில் ஏறப்போகும்பொழுது அதில் முப்பத்திரண்டு பதுமைகள் இருந்தனவாம். அவை கள் இவனை அதில் ஏறவிடவில்லையாமே. அப்பொழுது ஒவ் வொன்றும் ஒரு கதை இவனுக்குச் சொன்னதாக என்பாட்டி எனக்குக் கதை சொல்லியிருக்கிறாளே! அது உண்மைதானா?'

**தக:**—'குழந்தைகளே! நான் முதலிலேயே விக்கிரமா தித்தியனைப்பற்றிப் பல கதைகள் உண்டு என்று சொன்னேன் அல்லவா? நீ கேட்டவைகள் உண்மைதான். அவரது சிம்மா சனம் பூமியில் புதைந்து கிடந்திருந்தது. அதைப் போஜ

ராஜன் கண்டு எடுத்தான். அதில் ஏறப்போகும்பொழுது ஒவ்வொரு பதுமையும் இவனை அதில் ஏறவிடாமல் தடுத்து ஒவ்வொரு கதை சொன்னது. இவ்வித கதைகள் விக்கிரமாதித்தியன் கதைப் புஸ்தகத்திலிருக்கின்றன.'

## 10. ஹர்ஷர்.

குழந்தைகள் சிரித்துக்கொண்டு ராமு: 'அப்பா! விக்கிரமாதித்தியன் கதை வெகு நன்றாயிருக்கிறது; வடஇந்தியாவிலுள்ள அரசர்களைப்பற்றியே சொல்லுகிறீர்களே! தக்ஷிணத்தில் அரசாண்டவர்களைப்பற்றி ஒரு கதை சொல்லுங்கள்.'

தக:—'குழந்தைகளே! நீங்கள் கேட்ட கேள்வி சரியானதுதான்; வடஇந்தியாவில் அரசுபுரிந்துவந்த ஒருவரைப் பற்றி இன்று கதை சொல்லுகிறேன்; நாளைதினம் தக்ஷிணத்தில் அரசுபுரிந்தவர்களைப்பற்றிக் கதைகள் சொல்லுகிறேன்.

குழ—ராமு:—'அப்பா! அவர் யார்?'

தக:—'அவர் பெயர் ஹர்ஷர். ஹர்ஷருக்கு ராஜ்யவர்த்தனன் என்னும் தமையனிருந்தார். இவ்விருவரும் சுறுசுறுப்புள்ளவர்கள்; இவர்கள் குழந்தைப் பருவத்தில வேட்டையாடவும், யுத்தம் செய்யவும் கற்றுக்கொண்டார்கள்

இவர்களுடைய தகப்பனார் தனேசுவரத்தில் அரசுபுரிந்து வந்தார் அப்பொழுது அந்நியர்களாகிய ஹூணர்கள் என்னும் ஜாதியார் பஞ்சாபுக்கு மேற்கில் தங்கியிருந்தார்கள்; இவர்கள் அத்தேசப்பிரஜைகளை தொந்தரவு செய்துகொண்டிருந்தார்கள். இவர்களை எதிர்ப்பதற்காக ராஜ்யவர்த்தனனை அவர் தகப்பனார் அனுப்பினார்

ராஜ்யவர்த்தனர் பெருத்த சேனையோடு ஹூணர்களை எதிர்க்கச் சென்றார். ஹர்ஷருக்கு அப்பொழுது வயது பதினைந்து கூட ஆகவில்லை. ஹர்ஷரும் யுத்தத்திற்குச் சென்றார். ஆனால் ராஜ்யவர்த்தனர் வெகுதூரம் சென்றுவிட்டார். ஆகையால் ஹர்ஷர் தம் தமையனைத் தேடிப் பார்த்தார் போனவழி தெரியவில்லை. மலை அடிவாரத்திற்கு வந்தார் அங்குச் சிறிது நேரம் வேட்டையாடிக்கொண்டிருந்தார்

இவர்களுடைய தகப்பனருக்கு ஜுரம் வந்தது. அவர் ஜுரத்தால் அதிக கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார் ஜுரம் அதிகரித்தது; அநேக நாள்களாகியும் ஜுரம் விட்டபாடில்லை. இச்சங்கதியை ஹர்ஷருக்கு ஒரு தூதன் ஓடிவந்து சொன்னான் ஹர்ஷர் உடனே தனேசுவரத்துக்கு வந்து தம் தகப்பனாரைப் பார்த்தார் அவர் ஜுரம் நீங்காமல் மரணமடைந்தார்.

• ராஜ்யவர்த்தனர் ஹூணர்களை ஜயித்துவிட்டுத் திரும்பி வந்தார் மந்திரிமார்கள் இவருக்குப் பட்டாபிஷேகம் செய்தனர். இவர் அரசுபுரிய ஆரம்பித்தவுடன் மாளவ தேசத்து அரசன் ராஜ்யவர்த்தனருடைய சகோதரியின் கணவனைக் கொன்று அவன் சகோதரியைச் சிறைச்சாலையில் வைத்தான்.

இச்சங்கதி ராஜ்யவர்த்தனருக்கும் ஹர்ஷருக்கும் தெரிந்தது. இருவரும் மிக்க வருந்தினார்கள். இவர் ஹர்ஷரைத் தனேசுவரத்திலேயே இருக்கும்படி சொல்லிவிட்டு, 10,000 குதிரைப் படைகளுடன் மாளவதேசத்து அரசனைத் தண்டிக்கப் புறப்பட்டார் ராஜ்யவர்த்தனர் தைரியசாலி; தம் சகோதரியிடத்தில் மிக்க அன்புடையவர் ஆகையால் இவர் கோபமுண்டு மாளவ தேசத்து அரசனுடன் யுத்தம் புரிந்து அவனைத் தோற்கடித்தார்

ராஜ்யவர்த்தனர் சந்தோஷத்துடன் திரும்பி வருகையில், மாளவ தேசத்து அரசனுடைய சிநேகிதனாகிய சசாங்கன் ராஜ்யவர்த்தனரை வரவழைத்து ர சிநேகபான்மையோடு பேச வேண்டுமென்று அவருக்குத் தெரிவித்தான் ராஜ்யவர்த்தனர் சிறிதும் யோசனை செய்யாமல் அவனுடன் பேசச் சென்றார் சசாங்கன் நல்ல எண்ணத்துடன் இவ்விதம் செய்யவில்லை துரோக சிந்தனையினால் உடனே ராஜ்யவர்த்தனரைக் கொன்றுவிட்டான் .

இச்சங்கதி ஹர்ஷருக்குத் தெரிந்தது. மேலும் ஹர்ஷருடைய சகோதரி விந்தியமலையைச் சார்ந்த காட்டுக்குத் தப்பி ஓடிவிட்டதாகவும் தெரிந்தது. ஆனால் அவள் இருக்கும் இடம் தெரியவில்லை.

ஹர்ஷர் தம் பிரியமுள்ள சகோதரியைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றும், தம் தமையனைக் கொன்ற சசாங்கனைத் தண்டிக்கவேண்டுமென்றும் தீர்மானம் செய்தார்.

உடனே சேனைகளுடன் புறப்பட்டு முதலில் தம் சகோதரியைத் தேடினார். விந்தியபர்வதமோ வெகு நீளமும் உயரமுமானது; அதைச் சுற்றிலுமுள்ள காடுகளில் அலைந்தார். எங்கு தேடியும் அவளை தென்படவில்லை. ஓரிடத்தில் ஒரு குடிசையிருந்தது. அவள் அங்கு இருந்தாள்; ஹர்ஷருக்கு உண்டான சந்தோஷத்திற்கு அளவில்லை. உடனே தம் சகோதரியைச் சில துருப்புகளுடன் தம் தேசத்திற்கு அனுப்பினார். பின்பு சசாங்கனுடன் யுத்தம் செய்யப் புறப்பட்டார். சசாங்கனும் தன் சேனையுடன் வந்தான். இருவருக்கும் பலத்த யுத்தம் நடந்தது. சசாங்கன் தோல்வியடைந்தான். ஆனால் அவன் ஹர்ஷர் கையில் அகப்படவில்லை. எங்கேயோ ஓடிவிட்டான். ஹர்ஷர் அவன் தேசத்தைப் பிடித்துக்கொண்டார். பின்பு ஹர்ஷர் ஜயபேரிகையுடன் தனேசுவரத்துக்கு வந்தார்.




ஹர்ஷர், தமது மந்திரிகளுடைய யோசனையையும் கலந்து கனோஜை முக்கியப்பட்டணமாகச் செய்துகொண்டார். இவர் அநேக ராஜ்யங்களை ஜயித்தார். இவரது ராஜ்யம் இமாலய மலையிலிருந்து நர்மதாவரையிலும் பரவியிருந்தது. மேலும்

மாளவம், குஜராத், சௌராஷ்ட்ரம் முதலியவைகளும் இவரது ஆளுகைக்கு உட்பட்டவைகளே. ஒவ்வொரு இடத்திற்கும் ஒரு சிற்றரசனை நியமித்திருந்தார்.

ஹர்ஷர் ஆளுகை வெகு நன்றாக இருந்ததாம். எங்கு பார்த்தாலும் சத்திரங்களும், வைத்தியசாலைகளும் கட்டப்பட்டிருந்தன. பாடசாலைகளும் ஏற்பட்டிருந்தன இவர் ஜனங்கள் கொடுக்கவேண்டிய வரி மாசூலில் ஆறில் ஒரு பங்குதான் என்று விதித்திருந்தார்.

ஹர்ஷர் புத்தமதத்தில் அதிக பற்றுடையவர். ஆயினும் சிவனையும், சூரியனையும் பூசித்துவந்தார். இவர் காலத்தில் ஸம்ஸ்கிருதம் விருத்தியடைந்தது இவரே நாகாநந்தம், ரத்நாவளி, ப்ரியதரசி என்ற நூல்களை நாடகரூபமாக எழுதினார். பாணபட்டர் என்ற விதவான் இவர் காலத்திலிருந்தார் காதம்பரி என்கிற புஸ்தகத்தை எழுதியவர் இவரே.

ஹர்ஷர் ஐந்துவருஷத்துக் கொருமுறை கானோஜிலும், ப்ரயாகையிலும் பெரிய கூட்டம் கூட்டி வைத்தார் அச்சமயம் புத்தரின் உருவத்தை ஊர்கோலத்தில் கொண்டுவந்தார்கள் அதை யாவரும் வணங்கினார்கள் அவ்விதமே சூரியனையும், சிவனையும் வணங்கினார்கள். இக்கூட்டத்திற்கு சிற்றரசர்களும், இவர் ஆளுகைக்குள்ளிருக்கும் ராஜாக்களும், பண்டிதர்களும, புத்த சந்நியாசிகளும, பிராமணர்களும், ஏழைகளும் திரள் திரளாக வந்திருந்தார்களாம் மேலும் ஹர்ஷர், ப்ரயாகையில் இக்கூட்டம நடத்தினபொழுது சீன தேசத்து பௌத்த யாத்திரிகர் ஹுயன்த்ஸாங்க் என்பவரையும் வரும்படி வேண்டிக்கொண்டாராம்.

இக்கூட்டம் எழுபத்தைந்து நாள் வரையிலும் இருந்தது. முதல்நாள் புத்தர் விக்கிரகம் செய்து, அதை மண்டபத்தில் வைத்து, அலங்காரஞ் செய்தார்கள் பின்பு சிறப்பாக உத்ஸவம் நடத்தப்பட்டது. இரண்டாவது நாள் சூரியனுக்கும். மூன்றாவது நாள் சிவனுக்கும் உத்ஸவங்கள் நடந்தன. நான்காவது நாளில் புத்த சமயத்தவர்களுக்கு ஏராளமாக பொன் நாணயங்களும் பவழம், முத்து முதலியவைகளும் தானம் செய்யப்பட்டன. மீதி இருபது நாட்கள் வரையிலும் பிரா

டணர்களுக்கு ஏராளமாகத் திரவியம் கொடுத்தார். மற்ற நாட்களில் பரம ஏழைகளுக்குத் தானதர்மங்களை விசேஷமாகச் செய்தாராம்.

ஹர்ஷர் தமது ராஜ்யங்களுக்குத் தாமே நேரில் சென்று, சரியாக ஆளப்பட்டு வருகிறதாவென்று அறிந்து வருவார். ஜனங்கள் தப்பு செய்தால், தப்புக்குத் தகுந்த தண்டனை விதிப்பார்.

ஹர்ஷர் இப்படி ஐந்துவருஷத்திற்கு ஒருமுறை அதிக தானதர்மம் செய்துவந்தமையால் பொக்கிஷத்தில் பணம் குறைந்துவிட்டது; ஆயினும் மறு ஐந்துவருஷத்திற்குள் பணம் பொக்கிஷத்தில் சேர்ந்துவிடும்.

ஹர்ஷரைக்குறித்து நாம் சொல்லியிருப்பதெல்லாம் ஹூயன் த்ஸாங் எழுதியவைகளிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. இவர் இந்தியாவில் பதினாறு வருஷகாலம் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். ஹர்ஷருடைய ராஜ்யமுழுவதையும் சுற்றி ஆங்காங்குள்ள பண்டிதர்களோடு மதவிஷயம் முதலியவைகளைக் குறித்து சம்பாஷித்தார். இவர் மகா பண்டிதர். இவர் மீது ஹர்ஷருக்கு மிக்கபிரியம். இவர் நாலந்தா (Nalanda) வில் அப்பொழுது ஸ்தாபிக்கப்பட்டிருந்த கலாசாலையில் அதிககாலம் செலவழித்ததாகத் தெரிகிறது.

கடைசியாக, அசோகரைப்போல ஹர்ஷரும் யுத்தம் செய்வதை நிறுத்திவிட்டுக் கடவுளை துதிசெய்து வந்தார். சுமார் ஐம்பது வருஷகாலம் இவர் அரசாண்டபின் மரணமடைந்தார். இவர் காலத்தில் நாகரிகம் விருத்தியடைந்தது. ஜனங்கள் அதிகரித்தார்கள்; தேசம் சுபிட்சமாயிருந்தது.

**குழ. — கமலா :** — 'அப்பா! ஹர்ஷர் தம் சகோதரியிடத்தில் மிகவும் அன்புடையவராக விருந்தாரே! அவ்விதமே எல்லாருமிருக்கவேண்டும்.'

**ராமன் :** — அப்பா! ஹர்ஷர் புத்தமதத்தில் சேர்ந்திருந்தபோதிலும் எல்லா மதங்களையும் சமரஸமாகப் போற்றி வந்தது மெச்சத்தகுந்ததல்லவா?

தக:—நீங்கள் சொல்வதெல்லாம் சரி. நான் நாளை தினம் தக்ஷிணத்தில் அரசபுரிந்தவர்களைப்பற்றிச் சில கதைகளைச் சொல்லுகிறேன். மணி ஆய்விட்டது. தூங்கப்போங்கள்

(குழந்தைகள் தூங்கப்போயினர்).



## 11. திராவிடர்கள்.

### பாண்டியர் —நெடுஞ்செழியன்

தக:—குழந்தைகளே! தக்ஷிணத்திலிருந்தவர்களைத்தான் விசேஷமாய் திராவிடர்களென்று சொல்லுவார்கள்

திராவிடர்கள், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய பாஷைகளைப் பேசிவந்தார்கள். தமிழ்ப் பாஷையோ புராதனமானது. அவர்கள் கல்வியில் தேர்ந்தவர்கள வியாபாரம் செய்தும் ஜீவித்து வந்தார்கள். யுத்த வீரர்களாகவுமிருந்தார்கள். சிற்பசாஸ்திரத்திலும் கைதேர்ந்தவர்கள். ஸ்திரீகளும் படித்தவர்களாயிருந்தார்கள்; பக்தி சிரத்தையுடன் விளங்கினார்கள் இவர்கள கோஷா ஸ்திரீகளாயில்லை. இதனால் திராவிடர்கள் நாகரிகமடைந்தவர்களென்று தெரியவில்லையா? ராமு!'

ராமு:—'நல்லது அப்பா! திராவிடர்களுடைய அரசரைப்பற்றி சொல்லுங்கள்'

தக:—'தக்ஷிணத்தில் வெகுகாலங்களுக்குமுன் அரசாண்டவர்கள் பாண்டியர், சோழர், சேரர். இப்பொழுது பாண்டியரைப்பற்றி ஒரு கதை சொல்லுகிறேன்.'

'குழந்தைகளே! பாண்டியர்களுக்கு முக்கிய பட்டணம் மதுரை. பாண்டியர்களில் முதல் அரசன் நெடுஞ்செழியன் என்று சொல்லுகிறார்கள். சிலப்பதிகாரம் என்கிற நூலில் கோவலன், கண்ணகி என்பவர்களைப்பற்றி ஒரு கதையிருக்கிறது. அதில் கோவலனை நெடுஞ்செழியன் கொலைசெய்வித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கண்ணகி அவரிடத்திற்குச் சென்று அரசன் அவ்விதம் கொலைசெய்தது பிசகென்று முறையிட்டாள். அரசரும் தாம் செய்தது பிழையென்று ஒத்துக்கொண்டாராம்

ஆயினும் இவர் நீதிதவறி ஒருவனை வீணாகத் தண்டித்த தற்காக மிகவும் வருந்தினாராம். இந்த மனநோயால் இவர் உயிர்துறந்ததாகத் தெரிகிறது.

குழந்தைகளே! இவருக்குப்பின் **வெற்றிவேல் செழியன்** சிறிது காலம் அரசு புரிந்தார். இவரைப்பற்றி ஒன்றும் தெரிய வில்லை. இவர் குமாரர் **நெடுஞ்செழியன்** (இரண்டாவது) இவர் சிறுபிள்ளையாயிருந்தபொழுது, சோழதேசத்து அரசன் **கிள்ளி வளவன்** மதுரையை நோக்கிப் படையெடுத்துவந்தானும்.

அச்சமயம் பாண்டிய ராஜ்யத்திற்குப் **பழையன் மாறன்** சேனாதிபதியாயிருந்தார். இவர் சோழதேசத்து அரசனைத் துரத்திவிட்டார். நெடுஞ்செழியனுக்குத் தக்க வயது வந்த வுடன், சோழதேசத்து அரசர்களுடன் யுத்தம் செய்யப்போனார். இப்பாண்டியனை சோழ, சேர, ராஜாக்களும் சேர்ந்து எதிர்த்தார்கள். முதலில் எளிதில் பாண்டியனைத் தோற்கடிக்கலாமென்று அவர்கள் நினைத்தார்கள். அப்படி அவர்கள் நினைத்தது வீணாய்ப் போய்விட்டது. பாண்டிய அரசர் ஜய மடைந்தார்.

பாண்டிய அரசரும் துருப்புக்களும், பிரஜைகளும் ஜய பேரிகையுடன் மதுரைக்கு வந்தார்கள் யாவரும் அடைந்த குதூகலத்திற்கு அளவேகிடையாது. அக்காலத்தில் மதுரையில் தமிழ்ச்சங்க மிருந்தது அதில் அநேக தமிழ் வித்வான்க ளிருந்தார்கள். அவர்கள் **நெடுஞ்செழியன்** ஜயங்கொண்ட தைக் குறித்துப் புகழ்ந்து பேசினார்கள்.

**குழ — ராமன்:**—அப்பா! முன் ஒருதடவை பண்டிதர்கள் அரசர்களைச் சந்திரனுக்கும் சூரியனுக்கும் ஒப்பிட்டுப் பேசினார்களென்று சொன்னீர்களே! அவ்விதம் செய்தார்களோ?

**தக:**—அவ்விதம் இச்சகமாய்ப் பேசவில்லை. உண்மையாகவே இவரைப் புகழ்ந்து வந்தார்கள். இவர் வீரர்; தர்மம் செய்துவந்தவர். நீதிவழுவாமல் அரசாட்சி செய்து வந்தவர்; கெடுதியே செய்யத் துணியாதவர். தமது சேனையிலுள்ள ஒவ்வொருவரையும் தினம் விசாரிப்பார் ஒருநாள் இராத்திரி அதிக குளிராயிருந்தது. அப்பொழுது இவர் அவர்களில் காயமடைந்தவர்களைப் போய்ப்பார்த்து அவர்களிடத்தில் இதமான வசனங்களைச் சொல்லிவந்ததாக இவர் காலத்திலிருந்த **க்கீரர்** இயற்றிய பாடலால் தெரியவருகிறது



மதுரையிலுள்ள அழகான திருமலைநாயக்கர் மஹால்.



மதுரையிலுள்ள கோயில்.

இவர் வெகுகாலம் அரசுபுரிந்த பின் மதுரை சுந்தரேசர் ஆலயத்தில் மரணமடைந்தார். பாண்டிய ராஜ்பத்தில் நாகரிகம் விசேஷமாயிருந்தது. ஸ்திரீகள் பயபக்தியுடன் இருந்தார்கள். குளம், கால்வாய் முதலியவைகளை நீர்ப்பாய்ச்சலுக்கு உபயோகித்து வந்தார்கள். தமிழ்ப் பாஷையும் விருத்தியடைந்தது.''

குழ.—ராமன்:—அப்பா! பாண்டியரது ராஜ்யம் எது வரையில் பரவியிருந்தது?

தக:—'இப்பொழுதுள்ள மதுரை ஜில்லா, ராமநாதபுரம் ஜில்லா, திருநெல்வேலி ஜில்லா முதலியவைகள் சேர்ந்து ஒன்று யிருந்தது.'

ராமன்:—'அப்பா! மதுரையில் திருமலை நாயக்கர்மால் என்கிற அழகான அரண்மனை ஒன்று இருக்கிறதாம். அது திருமலை நாயக்கர் கட்டியதாமே! எனக்கு 6-வது பாரத்தில படிக்கும சீனு சொன்னான்

தக:—ஆம, உண்மைதான். திருமலை நாயக்கர் மதுரை அரசராக இருந்தார். அக்காலத்தில் அவர் கட்டியதுதான். அதில் இப்பொழுது அநேக ஆபீஸுகளிருக்கின்றன. உங்களுக்கு நாளைதினம் சேர ராஜ்யத்தைப்பற்றி ஒரு கதை சொல்லுகிறேன்



## 12. சேர ராஜ்யம்.—செங்குட்டுவன்.

தக:—'குழந்தைகளே! இன்று உங்களுக்கு சேரராஜ்யத்தைபபற்றி ஒரு கதை சொல்லுகிறேன், கேளுங்கள். சேரராஜ்யத்திற்கு முக்கியபட்டணம திருக்கரூர். இதற்கு வஞ்சி என்ற வேறொரு பேருண்டு. செங்குட்டுவன் சேரராஜாக்களில் ஒருவர் அநேக சிற்றரசர்கள் கிள்ளிவளவனுடன் சண்டைக்கு வந்தார்கள். இவருக்கு உதவிபுரிய செங்குட்டுவன் வந்து விரோதிகளை ஜயித்தார்

குழ—'ராமன்:—அப்பா! செங்குட்டுவன் சேர அரசன் என்றீர்கள். கிள்ளிவளவன் யார்?'

தக:—நீங்கள் கேட்ட கேள்வி சரியானதுதான்: பதில் சொல்லுகிறேன், கேளுங்கள். கிள்ளிவளவன் செங்குட்டுவனுடைய மாமன் பிள்ளை. இவன் சோழதேசத்து அரசன் முன் இரண்டாவது ஆதன் என்ற சேர அரசனிருந்தான். அவன் கரிகால சோழருடைய புத்திரியாகிய சோணை என்டவளை மணம்புரிந்துகொண்டான் இவனுக்கு இரண்டு புத்திரர்

களிருந்தார்கள். ஒருவன் பெயர் **சேங்குட்டுவன்**, மற்றொரு வன் பெயர் **இளங்கோவடிகள்**. இளங்கோவடிகள் அரசனுவான் என்று ஜோசியர்கள் சொன்னார்களாம். இளங்கோவடிகள் தம் தமையனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டுமே தவிர, தமக்குக் கிடைக்க நியாயமில்லை என்று எண்ணினார். இதற்காகச் சந்நியாசி வேடம் பூண்டார் **சிலப்பதிகாரம்** என்ற தமிழ்நூலை இயற்றினார் இவர் இராஜ்யத்துக்கு அரசராகாவிட்டாலும், கவிகளுக்கெல்லாம் அரசராக விளங்கினார்.

செங்குட்டுவன் சில காலஞ்சென்றபின் பெருத்த சேனையுடன் கப்பலில் பிரயாணமானார். ஒட்டர தேசம் வரையிலும போனார். வங்காளதேசத்து ராஜாக்களுடன் சண்டை செய்து அவர்களைத் தோற்கடித்தார். அச்சமயத்தில் இரண்டு ஆரிய ராஜகுமாரர்களாகிய **கனகனையும், விஜயனையும்** கைதியாக்கிக்கொண்டு வந்தாராம் ஏனெனில் அவர்கள் தமிழ் தேசத்து மன்னர்களைப்பற்றி இழிவாகப் பேசினார்களாம்.

இவர் இமாலயமலை வரையில் சென்று, கடைசியாக ஜய பேரிகையுடன் தம முக்கிய பட்டணமாகிய வஞ்சி நகருக்கு வந்தார் சிறிதுகாலஞ் சென்றபின் இறந்துபோனார்.

சேரர்களும் தமிழ்ப் புலவர்களாக இருந்ததாகத் தெரிகிறது இவர்கள் நாகரிகமடைந்திருந்தார்கள் கப்பல்களும் அக்காலத்தில் ஏற்பட்டிருந்தன.

'குழந்தைகளே! நாளைதினம் சோழராஜாக்களைப்பற்றி ஒரு கதைசொல்லுகிறேன்'

## 13. சோழ ராஜ்யம்.

### ராஜராஜ சோழனும், தஞ்சாவூர் கோயிலும்.

**குழ.—ராமன்**:—'அப்பா! சோழராஜனைப்பற்றி ஒரு கதை சொல்லுவதாகச் சொன்னீர்களே! இன்றைதினம் அதைச் சொல்லுங்கள்.'




தக:—'குழநதைகளே! சோழர்களில் அநேக ராஜாக்கள் முற்காலததில் அரசுபுரிநது வந்தார்கள். இவர்களுடைய முக்கியபட்டணம் தஞ்சாவூர.

இவர்களில் வீரபராக்கிரமமுள்ளவர் ராஜராஜ சோழர். இவர் சுமார் ஆயிரம் வருஷங்களுக்குமுன் இருநததாகத் தெரிகிறது. சோழராஜ்யத்தை நிலைநிறுத்தி அதற்குப் பெருமையை யுண்டாக்கியவர் இவரே. இவர் சுமார் இருபத்தெட்டு வருஷகாலம் அரசுபுரிந்து வந்ததாகத் தெரிகிறது.

இவர் அரசுபுரிவதில் சமர்த்தர். இவர் ஆளுகையில் இவருக்கு ஜயமே உண்டானது. இவர் சேரராஜனுடைய கப்பற்படையைத் தோற்கடித்தார். தெலுங்குதேசம், பாண்

டியதேசம், குடகு, தக்ஷிணத்தில் இன்னும் சில பாகங்களையும் ஜயித்தார். மேற்கு கரையிலுள்ள கொல்லம், வடக்கிலுள்ள கலிங்கதேசம் முதலியவைகளையும் ஜயித்தார். இவர் சில காலம் சென்றபிறகு இலங்கையையும் ஜயித்தார். பின்னிட்டு இவர் தேசங்களை ஜயிக்கப் போகவில்லை.



தஞ்சாவூரிலுள்ள கோயில்.

தஞ்சாவூரிலுள்ள பிரஹதீஸ்வரன் கோயிலைக் கட்டிவைத்தவர் இவரே. இப்படத்தைப் பாருங்கள். இங்கிருக்கும் கோயில் பெரியது. கோபுரமோ மிகவும் உயரமுள்ளது.

இதில் அதிக அற்புதமான வேலைப்பாடுகளுடன் சித்திர வேலைகள் செய்யப்பட்ட உருவங்களிருக்கின்றன.

கோயிலுக்குள் ஒரு பெரிய நந்தி ஒரே கல்லால் செய்யப்பட்டிருக்கிறது. இந்த நந்தியையும், இக்கோயிலின் உன்னதமான கோபுரத்தையும் அநேகர் சண்டைகளிலிருந்தும் போவது வழக்கம். இந்த நந்தி மிகவும் உயரமுள்ளது. இதைப்பற்றி பின்வரும் கதையைச் சொல்வதுண்டு :—

"இந்த நந்தி செய்யப்பட்ட நாள் முதல் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே வந்தது. அதன் காரணம் அநேககாலம் வரையில் ஒருவருக்கும் தெரியவில்லை. கடைசியாக புத்தி நுட்பமுள்ள சிற்பி ஒருவன் நந்திமுழுவதும் சந்தனத்தை நன்றாய்ப் பூசினான். மறுநாள் அதைப் பார்க்கும்பொழுது நந்தியின் உச்சியில் சிறிது பாகத்தைத்தவிர மற்றைய பாகத்திலிருந்த சந்தனம் நன்றாக உலர்ந்திருந்தது. உடனே அவ்விடத்தைப் பரிசோதித்துப் பார்த்தான். அதினுள் ஒரு தேரையிருந்ததாம். அதனால்தான் அது அவ்விதம் வளர்ந்து கொண்டிருக்கவேண்டுமென்று அவன் சொன்னான். அவன் சொல்லியபடி தேரையை எடுத்தபிறகு அந்நந்தி மென்மேலும் வளரவில்லையாம்."

சில வருஷங்கள் சென்றபின்பு ராஜராஜ சோழர் லக்ஷ தீவுகளையும் மால்தீவ் தீவுகளையும் கைப்பற்றிக்கொண்டார்.

குழந்தைகளே! முன்பு தஞ்சாவூரில் இவர் ஆலயத்தைக் கட்டிவைத்தார் என்று சொன்னேனே அல்லவா? அது சிவாலயம். இவர் சிவ பக்தர். ஆயினும் இவர் பிறமதத் துவேஷியல்ல; நாகப்பட்டணத்தில் பௌத்தர்களுக்கு ஒரு ஆலயம் கட்டிகொடுத்தார்.

ராஜராஜ சோழர் ராஜ்யத்தைச் சீர்படுத்தி யாதொரு கலகமின்றி ஆண்டுவந்தார். சோழர்கள்தான் காவேரியில் பெரிய அணைக்கட்டைக் கட்டினார்கள். இதனால் அவ்விடத்தில் பூமி அதிக செழிப்பா யிருக்கிறது. ஜனங்களும் வியவசாயத்தில் விருத்தியடைந்து வருகிறார்கள்.

இதனால் நாகரிகம் விருத்தியடைந்திருந்ததென்று தெரியவில்லையா?

ராஜராஜ சோழர் சத்தியம் தவறாதவர். நீதி மன்னர். இவர் இறந்தபொழுது இவர் இராஜ்யம் சென்னை இராஜதானி, இலங்கை, மைசூரில் பெரும் பாகம் ஆகிய தேசங்களில் பரவி யிருந்தது

குழ:—அப்பா! நந்தியைப்பற்றிய கதை வெகு ஆச் சரியமாயிருக்கிறது! எப்பொழுது பெரிய சிவாலயமிருந் ததோ சிவபக்தர்களும் அநேகர் இருந்திருப்பார்களே! அவர் களில் ஒருவரைப்பற்றி சொல்லுங்கள்.

தக:—அவ்விதமே சொல்லுகிறேன்.

## 14. மாணிக்க வாசகர்.

தகப்பனார்:—குழந்தைகளே! திருவாதவூர் என்ற ஸ்த லத்தில் சம்பபாதாசிருதர் என்னும பிராமணருக்கு வெகுகால மாகக் குழந்தையில்லை. அவர் ஸ்ரீவாதபுரேசரை வணங்கி வந்தார். கடைசியாக ஒரு பிள்ளை அவருக்குப்பிறந்தது அப்பிள்ளைக்கு திருவாதவூரர் எனப பெயரிட்டார் இவர் கல்விபயின்று தர்மசாஸ்திரம், வியாகரணம், தருககம் முதலிய வைகளைக் கற்றுவந்தார் இவருக்கு பதினாறு வயதானதும் வித்துவானாய்விட்டார்

அக்காலத்தில் பாண்டியநாட்டில அரசுபுரிந்துவந்த அரி மர்த்தன பாண்டியன் இவரை வரவழைத்து ராஜ்ய விஷயங் களைப்பற்றி சில கேள்விகள் கேட்டார் திருவாதவூரர் அரசன் கேட்ட கேள்விக்குத் தக்க பதில் அளித்தார் அரசன் மிகவும சந்தோஷித்து இவருக்கு பிரமராயர் என்ற பெயரிட்டார் பின்பு இவரை பிரதான மந்திரியாகவும் பாண்டிய அரசன் நியமித்துக்கொண்டார். இவர் பாண்டிய ராஜ்யத்திற்கு மந்திரி யானவுடன் தமது வேலையைச் சரிவர செய்துவந்தார். அரச னும் பிரஜைகளும் இவருடைய சாமர்த்தியத்தைக்கண்டு புகழ்ந்துவந்தார்கள்.

ஆனால் இவரோர் சிவபக்தர். இவர் 'நாம் பொருளைச் சம் பாதிப்பதிலும் நல்லபேர் அடைவதிலும பயனென்ன? பக வானைத் தியானித்துக்கொண்டு மோக்ஷமடைவதே சிறந்தது' என்று யோசித்தார்

இவர் கோயிலுக்குப்போய் கடவுளைப் பணிவதும், ஆன் மாவை விசாரஞ்செய்வதுமே இவருடைய முக்கிய காரிய மாகவிருந்தன. ஒருநாள் அரசன் "மந்திரீ! என் உபயோ கத்திற்கு குதிரைகளை விலைக்கு வாங்கிவாரும்" என்றார். திருவாதவூரார் வேண்டிய பணத்தை எடுத்துக்கொண்டு சீர் காழி வந்துசேர்ந்தார். அந்தவூர் சிவாலயத்துக்கருகில் ஒரு மரத்தின்கீழ் ஒரு பக்தரிருக்கக் கண்டார் அவரிடம் சென்று அவரை திருவாதவூரார் வணங்கினார்

அந்த பக்தர் "நீ இங்கேயே சிறிதுகாலம் தங்கியிரு. நீ சில காரியங்களைச் செய்யவேண்டும" என்றார். அவரை குருவாகக்கொண்டு திருவாதவூரார் அவர் வார்த்தையின்படி அங்கேயேயிருந்து கோயிலுககு வேண்டியசெலவு பூஜை முதலியவைகளுக்கும அப்பணத்தைச செலவழித்தார்

தமது குருவினிடத்தில் சிவஞானபோதம் என்ற நூலின் பொருளகளைத தெரிநதுகொண்டு உடனே மிக மாதுரியமாய் சில பாடல்களை இயற்றினார் இப்பாடலகளின் சொற்கள் மணி போல விளங்கினமையால அககுரு திருவாதவூராருக்கு மாணிக் கவாசகர் என்ற பெயரை அளிததார்

இவர் குதிரைகளை வாங்காமல் பணத்தையெல்லாம் பற்பல தர்மம்செய்து செலவழித்துவிட்டார் இவருடன் வநதிருநத சிலர் இவைகளையெல்லாம அரசனிடத்திற்குப்போய் தெரிவித் தார்கள அரசன் கோபமுண்டு "உடனே குதிரைகளாவது, பணமாவது கொண்டுவநது ஒப்புவிக்கவேண்டும்" என்று கடிதம் எழுதி அனுப்பினார்

மாணிக்கவாசகர் மிக வருநதி கடவுளைத் துதிசெய்தார் "அன்பனே! ஒன்றுக்கும் பயப்படாதே பாண்டிய அரச னிடத்திற்குக் குதிரைகள் சிறிது தினததிற்குள வரும் என்று சொல்" என்ற அசரீரி வாக்குண்டாயிற்று. இவர் அவ்வித மே அரசனிடத்திற்குப்போய், அவரிடத்தில் கூடிய சீக்கிரத் தில் குதிரைகள் வநதுவிடும் என்றார்.

சில தினங்களானபின்பும் குதிரைகள் வரவில்லை. அரசன் உடனே மாணிக்க வாசகரைச் சிறைச்சாலையில் வைத்தார். இவரை அங்குள்ளார் பலவிதமாகத் தொந்திரவுசெய்தார்கள்.

உடனே பெருமான் காட்டிலுள்ள நரிகளையெல்லாம் விலை உயர்ந்த குதிரைகளாக்கினார். ஒவ்வொரு குதிரைக்கும் ஒரு வேலைக்காரனை நியமித்தார் தாம் அவர்களுக்கெல்லாம் தலைவராகவிருந்து மதுரைக்குவந்து பாண்டியராசனைக்கண்டு குதிரைகளைக் கொடுத்தார்

அரசன் சந்தோஷித்து மாணிக்கவாசகரைச் சிறைச்சாலையினின்று விடுவித்தார். அன்றிரவு எல்லாக் குதிரைகளும் நரிகளாய்விட்டன லாயத்திலிருந்த குதிரைகளைக் கடித்துவிட்டு ஓடிப்போய்விட்டன. இச்சங்கதியை அரசனுக்கு வேலைக்காரர்கள் தெரிவித்தார்கள். அரசனுக்கு உண்டான கோபத்திற்களவில்லை வேலைக்காரர்களைக் கூப்பிட்டு மந்திரியைப் பணம் கேளுங்கள், கொடாவிட்டால் அவனை உபத்திரவம் செய்யுங்களென்றார். இவர்களும் அவ்விதமே செய்தார்கள்.

மாணிக்கவாசகர் கடவுளை நம்பி அவரையே சதா துதி செய்துவந்தார். கடைசியாக கடவுள் வைகை நதியில் தண்ணீர் பெருகும்படி செய்தார். நகரெல்லாம் ஜலம் பரவிற்று, ஊரே முழுகிவிடும்போலிருந்தது. "வீட்டுக்கோராள் வீதம் சேகரித்து அணைகட்டி வெள்ள நீரைத் தடைசெய்யுங்கள்" என்றார் அரசன்.

அவ்விதமே வேலைசெய்தார்கள் ஆனால் அவ்வூரில் வந்தியென்னும் பிட்டுவிற்று பிழைக்கும் ஒருவள் தனக்கு பிள்ளையில்லையே என்று மிகவும் விசனமுற்றிருந்தாள் பெருமான் வேலைக்காரன் வேஷந்தரித்து வந்திக்குப்பதிலாக வேலைசெய்தார். எல்லாக் கூலி ஆட்களும் சீக்கிரமாய் வேலைசெய்தார்கள் அவர்களுடைய பாகம் அடைப்பட்டிருந்தது ஆனால் பெருமானுடைய பாகம் அடைப்படாமலிருந்தது.

அரசன் கோபித்து அவ்வேலைக்காரனாகிய பெருமானை அடித்தார். பெருமான் தம் கையிலிருந்த ஒரு கூடைமண்ணை உடைப்பில் கொட்டிவிட்டு மறைந்துவிட்டார் உடனே உடைப்பு அடைபட்டது. பெருமான் முதுகில் அரசன் அடித்த அடி அரசன் முதுகிலும் மற்ற ஜனங்கள் முதுகிலும் பட்டது. இவைகளைப் பாண்டியன் கண்டு பயந்தான்.

உடனே "பாண்டிய அரசனே! நான்தான் நரிகளைக் குதிரைகளாகச்செய்து உனக்குக்கொடுத்தேன் மறுபடியும் குதிரைகள் நரிகளாய்விட்டன. நீ மாணிக்க வாசகரைத் தொந்திரவுசெய்தாய். வைகையில் பிரவாகம் வரும்படி செய்தேன். மாணிக்கவாசகர் உன் பணத்தை ஆலயங்களுக்கும், பக்தர்களுக்கும் தர்மம் செய்தார். ஒரு தம்படிகூட அவர் எடுத்துக்கொள்ளவில்லை" என்ற அசரீரி வாக்குண்டாயிற்று

அரசன் உடனே மாணிக்கவாசகரைத் தேடினார் அவர் பகவானைத் துதிசெய்துகொண்டிருந்தார் "ஐயா! உம்மை நான் இம்சித்ததற்காக என்னை மன்னிக்கவும்" என்று அரசன் அவரைப் பலமுறை வேண்டிக்கொண்டார். அவர் பாண்டியனை வாழ்த்திவிட்டு சிதம்பரம்சென்று, அங்கு சிறிது காலம் கடவுளைத் துதிசெய்துகொண்டிருந்தார் கடைசியாக மோக்ஷமடைந்தார்.

தக:—குழந்தைகளே! நாளை தினம் குலோத்துங்க சோழனைப்பற்றி சொல்லுகிறேன். நித்திரைசெய்யுங்கள்.



## 15. குலோத்துங்க சோழர்.

தக:—குழந்தைகளே! ராஜ ராஜருக்குப்பின் சோழ நாட்டிலே அவர் பிள்ளை ராஜேந்திர சோழர் ஆண்டுவந்தார்.

அவர் தம்முடைய பெண்ணை சாளுக்கிய தேசத்து அரசனாகிய ராஜ ராஜ நரேந்திரருக்கு கலியாணம் செய்துவைத்தார். ராஜ ராஜ நரேந்திரர் பிரசித்திபெற்றவர்

சோழ ராஜ்யத்தில் ஆதி ராஜேந்திரருக்குப்பின் சந்ததியில்லாமற்போகவே ராஜ ராஜ நரேந்திரனுடைய குமாரராகிய ராஜேந்திரன் அரசனானான். சிறிதுகாலத்திற்குப்பின் குலோத்துங்க சோழன் என்ற பெயரை அடைந்தார். இவராலதான சாளுக்கிய சோழவம்சம் ஸ்தாபிக்கப்பட்டது

இவர் பாலியமுதற்கொண்டு யுத்தப் பயிற்சிபெற்று வீரன் என்று பேர்பெற்றார். கலிங்க பாண்டியநாடுகளையும் தக்ஷிண திருவாங்கூரையும் ஜெயித்தார்

இவர் தமது பெரிய ராஜ்யத்தை நாற்பத்தொன்பது வருஷ காலம செவ்வனே ஆண்டுவந்தார். இவர் நிலத்தீர்வையைப் பரிசோதித்து ஜனங்களுக்கு அநுகூலமாகச் செய்தார்.

தமிழ், தெலுங்கு பாஷைகளை விருத்திசெய்ய அநேக கிரந்தங்களைப் பல பண்டிதர்களைக்கொண்டு எழுதிவைததார்

## 16. காஞ்சிபுரமும் அதன் மகிமையும்.

**கோபாலன் :** — அக்கா! சென்றவருஷம் கருடசேவைகுப போனோமே! அநதவூரின் பெயரென்ன ?

**கமலம் :**—காஞ்சிபுரம.

**கோ :** — அப்பா! காஞ்சிபுரத்துக்கு ஏன் அவ்வளவு மகிமை ?

**தகப்பனார் :**—காஞ்சிபுரம் என்றால் ஸ்வர்ணநகரம் என்ற அர்ததம் மேலும இது இநதியாவிலுள்ள ஏழு புண்ணிய க்ஷேத்திரங்களில ஒன்று. இது புராதனமானது. ஆகையால் தான் அதை தக்ஷிணகாசி என்று சொல்லுகிறார்கள்.

இங்கு அநேக தோப்புகளும், குறவுகளும், அகலமும் நீண்ட தெருக்களும் உள. வெகுகாலமாக இவ்வூர் நெசவு தொழிலுக்குப் பெயர்பெற்றது

சீனதேசத்து யாததிரிகர் ஹயோன்தஸாங்கு என்பவர் " இவ்வூர் மிகவும் விசாலமுள்ளதென்றும், இவ்வூர் ஜனங்கள் தைரியம, பக்தி, சத்தியம், கல்வி இவைகளில் மிகச் சிறநதவர்களாயிருநதார்கள்," என்றும் கூறியிருக்கிறார். " அக் காலததில் அங்கு பிராமணர்கள், பௌத்தர்கள் ஏராளமாக இருந்ததாகவும்" அவர் கூறியிருக்கிறார்.

இப்பொழுதும் காஞ்சிபுரத்துக்கு சமீபத்திலுள்ள திருப்பாருட்டி குன்றத்திலிருக்கும் ஜைனகோயிலினால் ஜைனர்களும் அங்கு இருந்திருக்கவேண்டும் என்று தெரிகிறது. ஆனால் இப்பொழுது ஜனங்கள் விசேஷமாய் அங்குளள வாதராஜரையும், ஏகாம்பர நாதரையும் உத்தேசித்துதான் போகிறார்கள்.

"ஒருகாலத்தில் பிரம்மதேவருக்கும் ஸரஸ்வதிக்கும் வாக்குவாத முண்டானபோது ஸரஸ்வதிதேவி கோபமுண்டு இவரைவிட்டு விலகி விட்டாளாம். அச்சமயத்தில் பிரம்ம அஸ்வமேதயாகம் செய்ய எண்ணி காஞ்சிபுரம் வந்தாராம ஏனெனில் காஞ்சிபுரத்தில் ஒரு யாகம் செய்தால் அது வேறிடங்களில் ஆயிரம் யாகங்கள் செய்ததற்குச் சமானமாம்.

இந்த யாகத்தைக் கெடுக்க ஸரஸ்வதி அநேக தேவதைகளைக் கூட்டிக்கொண்டு ஒரு பெருத்த நதி ரூபமாக இங்கு வநதாளாம். பிரம்மதேவர் அப்பொழுது விஷ்ணுவின் உதவியை வேண்ட, அவர் உடனேவநது ஸரஸ்வதிதேவியைச சமாதானப்படுத்த முயன்றார். அப்பொழுது, ஸரஸ்வதி தான் வெள்ளப் பெருக்குடன் வநத நதியைத தக்ஷிணகங்கையாகக் கொண்டாடும்படி செய்தால் தான் சாநதமாயிருப்பதாகக் கூறினாள் அதற்கு மகாவிஷ்ணு சமமதிக்கவே, பிரமமதேவர் செய்த யாகம் நிறைவேறிற்று.

இவ்வற்புத காட்சியைக கண்ணுற்ற அவ்வூர் ஜனஙகள் மகாவிஷ்ணுவை சதாகாலமும் அங்கேயே இருக்கவேண்டுமென்று வேண்டினார்கள். விஷ்ணு அபபடியே செய்ய சம்மதித்தார். உடனே சின்ன காஞசிபுரததிலிருக்கும் விஷ்ணு ஆலயம் அதாவது வரதராஜ பெருமாள்கோயில கட்டபபட்டதாம் அப்பொழுது முதற்கொண்டு வருஷாவருஷம வைகாசி மாதத்தில் அங்கே பிரமோற்சவம் நடததபபட்டு வருகிறது."

"பெரிய காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதருடைய கோயிலிருக்கிறது அதிலிருக்கும லிங்கம் தென்னிநதியாவிலுள்ள அதிசிரேஷ்ட பஞ்சலிங்கஙகளில் ஒன்று.

ஒருகாலத்தில் பார்வதி தேவியார் சிவபெருமானுக்குப்பின் நின்றுகொண்டு தன் கைகளால் அவர் கண்களை மூடினாள். உடனே உலகமுழுவதும் இருளாய்விட்டது. சிவபெருமானுக்கு அதிககோபமுண்டாய் பாாவதியைச் சபித்தார். பார்வதிதேவியார் தான் தெரியாமல் செய்ததாகச் சொல்லி விசனப்பட்டு சாபநிவர்த்திக்கு ஒருவழியைச சொல்ல வேண்டுமென்று பெருமானைக் கேட்டாள்.

அப்பொழுது அவர் "காஞ்சிபுரத்திலிருக்கும் ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ள கம்பாநதி குளத்தில் ஆறுமாதம் வீற்



காஞ்சிபுரத்திலுள்ள ஆலயம்.

றிருந்து தபஞ்செய்தால் அச்சாபம் நீங்கும்" என்று பதி லளித்தார். பார்வதியும் அவ்விதமேசெய்து சாபத்தை நீக் கிக்கொண்டாள். ஒவ்வொருவருஷமும் சித்திரைமாதத்தில் உற்சவம்செய்து இவ்விசேஷத்தைக் கொண்டாடுகிறார்கள்."

இவ்வாலயங்களைத் தவிர இங்கு கைலாசநாதர் கோயில், காமாக்ஷியம்மன் கோயில், வைகுண்டப்பெருமாள் கோயில் ஆகிய அநேக ஆலயங்களிருக்கின்றன. இவைகளில் வைகுண் டப்பெருமாள் கோயிலும், கைலாசநாதர் கோயிலும் பல்லவ ராஜாக்கள் காலத்தில் கட்டப்பட்டவைகள்

கோ :— அப்பா ! விஷ்ணு ஆலயத்தின் வரலாறு ஆச்சரியமாயிருக்கிறது அங்கு அநேக விஷ்ணுபக்தர்களிருந் திருக்க வேண்டுமே. அவர்களில் எவராவதொருவரைப்பற்றி கதை சொல்லுங்கள்.

தக :—குழந்தைகளே ! சரி, அப்படியே சொல்லுகிறேன்



## 17. திருமங்கையாழ்வார்.

தகப்பனார் : — குழந்தைகளே ! சோழ மண்டலத்திலே திருமங்கை என்னும் நாட்டில் நீலன் என்று ஒருவன் இருந் தான். இவன் மிக்க தைரியமுள்ளவன் ஆயுத வித்தையில் சமர்த்தன் ஆகையால் சோழராஜன் இவனைத் தன் சேனா பதியாக ஏற்படுத்தினார்.

இவன் சோழராஜனுடைய பகைவர்களை வென்றான். சோழராஜா தனது சிற்றரசர்களில் இவனை ஒருவனாகச் செய்தார். அது முதற்கொண்டு இவனுக்கு பரகாலா என்ற பெயரும் உண்டாயிற்று.

இவன் கும்பகோணத்திற்கு சமீபத்திலிருந்த ஒரு விஷ்ணு பக்தரின் பெண்ணாகிய குமுதவல்லியின் அழகையும், நற் குணங்களையும் மெச்சி அவளை மணம்புரிய விரும்பினான் பக்தர் சம்மதித்து குமுதவல்லியைக் கேட்டார். அவள் மிக்க தெய்வபக்தி யுள்ளவள். ஆனதுபற்றி "அப்பா ! என்னை விவாகம் புரிபவர் விஷ்ணுபக்தராயும், பஞ்சசம்ஸ்காரம் பெற் றவராயு மிருக்கவேண்டும்" என்றாள்.

பக்தர் இச்சங்கதியை பரகாலருக்குத் தெரிவித்தார். அவர் உடனே விஷ்ணுகோயிலுககுச் சென்று கடவுளை வணங்கி பஞ்சசமஸ்காரங்களைப் பெற்றார் பின்பு பக்தா வீட்டிறகுப்போய் விவாகமுகூர்த்தம் இப்பொழுது நிச்சயிக்கலாமோ வென்றார் குமுதவல்லி "ஒரு வருஷகாலம் தினம அநேக வைஷ்ணவ பக்தர்களுக்கு போஜனம் செய்விககவேண்டும. அவர்கள் புசித்தபின் அவர் புசிக்க வேண்டும இவ்விதம் செய்தபின்தான் அவரை மணந்து கொளவேன்" என்று சொன்னாள்.

பரகாலர் என்ன செய்வார்! அவ்விதமே செய்கிறேன் என்றுசொலலி, அவள் சொல்லியபடி செய்து முடித்தார் பின்பு இருவருக்கும் விவாகம் நடநதது. பரகாலர் தமது மனைவியுடன் தமது ஊருக்குப்போய் விஷ்ணுகோயில்களுக்கும, பக்தர்களுக்கும தானதர்மம் செய்துவநதார். இவ்விதம் இவர் செய்துவந்தமையால் சோழராஜனுக்கு கப்பம் கட்ட தவறிவிட்டார்.

சோழராஜா பலமுறைக் கப்பம்கேட்டும் 'நாளைக்கு அனுப்புகிறேன்' என்று அவர் சொல்லிவநதாரே யொழிய கப்பததைக்கட்டவில்லை அரசனுக்கு கோபமுண்டாயிற்று. உடனே தனது சேனாபதியை அனுப்பினார் அவர் சேனையுடன் வந்து பரகாலருடன் யுத்தம் புரிந்தார். பரகாலர் சேனாபதியைத் தோற்கடித்தார். சேனாபதி சோழராஜனிடத்தில் சென்று தான் தோல்வியடைந்ததைத் தெரிவித்தார்.

அரசன் மிகுந்த கோபத்துடன் தனது பெருத்த சேனையுடன்வந்து பரகாலருடன் யுத்தம் புரிந்தார் பரகாலர் அரசனைத் தோற்கடித்தார். அநேகர் யுத்தத்தில் மடிந்தார்கள். அரசன் தந்திரமாய் பரகாலருடன் நல்ல வார்த்தைகளைப் பேசி கப்பத்தைச் சரிவர அனுப்பினால் போதுமென்று சொல்லிக்கொண்டிருந்து அவரைக் கைதிசெய்து மந்திரியினிடம் ஒப்புவித்துவிட்டு தமது பட்டணத்திற்குப் போய்விட்டார்.

மந்திரி இவரை ஒரு தேவாலயத்தில் சிறைவைத்தார். பரகாலர் மோசம் போனோமே என்று விசனப்பட்டுக்கொண்டு கடவுளை தியானம் பண்ணிக்கொண்டிருந்தார்.

ஒருநாள் இராத்திரி காஞ்சிபுரத்து அதிபரான பேரருளாளப் பெருமாள் கனவில்தோன்றித் தாம் பணம் கொடுப்பதாகச் சொல்லி அவரை காஞ்சிக்கு வரும்படி உத்திரவளித்தார்.

பரகாலர் "மந்திரி! காஞ்சிக்கு வந்தால் பணம் கொடுக்கிறேன்" என்று சொன்னார் அவ்விதமே செய்யும் என்று சொல்லி மந்திரி பரகாலருடன் காஞ்சிபுரத்துக்குப் போனார் இங்கு வந்தவுடன் பணம் பரகாலருக்குக் கிடைக்கவில்லை. பரகாலர் திகைத்தார். மிக்க வருந்தி கடவுளைத் துதிசெய்தார் மறுநாள் பெருமாளுடைய கருணைகடாக்ஷத்தால் வேகவதி நதிக்கரையில் அவர் பணத்தைக் கண்டார் அதிலிருந்து கப்பப்பணத்தை எடுத்து மந்திரியிடம் கொடுத்தார் மீதியுள்ளதை தர்மம் செய்தார்.

சோழராஜா மந்திரியின் மூலமாக இதைக்கேட்டு இவர் மிக்க பக்திமான் என்று அறிந்துகொண்டார் தாம் பெற்றுக்கொண்ட கப்பப்பணத்தையும், தம்மிடத்திலிருந்த திரவியத்தையும் தானதர்மம் செய்ய இவருக்கு கொடுக்கும்படி செய்வித்தார்

பரகாலர் யாவற்றையும் பக்தர்களுக்கு கைங்கரியம் செய்தார். பின்பு இவர் கையில் ஒருகாசுகூட இல்லை. ஆகையால், தமது நான்கு நண்பர்களுடன் பரகாலர் கொள்ளையடித்து வந்தார். அதனால் கிடைத்த பணத்தை பக்தர்களுக்கு கொடுத்து உதவினார்

பகவான் லக்ஷ்மீதேவியுடன் சாதாரணப் பிரயாணிபோல் பரகாலர் கொள்ளையடிக்கும் வழியாகவந்தார் வழக்கம்போல பரகாலர் இவர்களை வழிபறித்து இவர்களிடத்திலிருந்த ஆபரணங்களையெல்லாம் பிடுங்கிக்கொண்டார். பகவான் விரல் ஒன்றிலிருந்த மோதிரத்தை இவரால் எடுக்க முடியவில்லை தமது பற்களால் பரகாலர் அதைக்கடித்து எடுத்துவிட்டார். பின்பு இவர் அவ்வாபரண மூட்டை வரவர வெகுபளுவாய்க் கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டு "ஓ! பிராம்மணா! நீ என்ன மந்திரம் செய்தாய்" என்று கேட்டார்.

பகவான் "ஐயா! அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறேன், சமீபத்தில் வாரும்" என்று வரவழைத்தார். உடனே

பரகாலருக்கு அஷ்டாக்ஷர மகாமந்திரத்தை உபதேசித்தார். தக்ஷணமே கருடா ரூடராய் இவருக்கு பகவான் காட்சி அளித்தார்.

பகவானுடைய அருளால் பரகாலருக்கு அப்பொழுது ஞான அறிவுண்டாயிற்று. ஆனதுபற்றி பகவானைக் குறித்து வெகு சிறந்த கவிகளைப்பாட சக்தி இவருக்கு உண்டாய் விட்டது. உடனே திருமந்திரத்தின் பெருமையைப் பற்றி அநேக கவிகளைச்செய்தார்.

இவர் மங்கைநாட்டில் பிறந்தமையால் இவருக்கு திருமங் கையாழ்வார் என்ற பெயர் உண்டாயிற்று

பின்பு திருமங்கையாழ்வார் தம் மனைவியுடன் அநேக புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றார். கடைசியாக சீர் காழிக்கு இவர் வந்தவுடன் அங்கே உள்ள விஷ்ணுபக்தர் கள் "நாலுகவிப்பெருமாள் வந்தார், அருள் மாரிவந்தார்" என்றுசொல்லி மரியாதைச் செய்தார்கள். அவ்வூரிலுள்ள சைவ சமயாசாரியராகிய திருஞான சம்பந்தமூர்த்தி நாய னாரின் சிஷ்யர்கள்வந்து, "எங்கள் நாயனார் உள்ள விடத்தில் நீங்கள் விருதூதிச் செல்லக்கூடாது," என்று சொன்னார்கள்

இதைக்கேட்டதும் ஆழ்வார் திருஞான சம்பந்தர் வீற் றிருக்கு மிடத்திற்குப் போனார். அவருடன் ஆழ்வார் வாதம செய்ய ஆரம்பித்தார். நாயனார், "ஐயா! உமது கவித் திறமையை நான் காண விரும்புகிறேன். முதலில் பாடல் பாடும்" என்றார்

கடவுள் அருள்பெற்ற ஆழ்வார் பதிகம் பாடினார். நாய னார் மிகவும் மகிழ்ந்து, "ஐயா, உமக்கு இவ்விருதுகள் உரியனவே, தகும்" என்று சொன்னார். மேலும் நாயனார் இவருக்குத் தமது வேலாயுதத்தைப் பரிசாக அளித்தாராம்.

பின்பு ஆழ்வார் ஸ்ரீரங்கத்திற்குப்போய் ரங்கநாதரை தரி சித்தார். அவருடைய ஆலயத்திற்கு மதிலும், கோபுரமும் கட்ட ஏற்பாடு செய்தார். தமது சிஷ்யர்களுடன் நாகப்பட்ட ணம சென்று பொன்னாலசெய்த புத்த விக்கிரகத்தை எடுத்து வந்து அதை உடைத்து விற்றார் கிடைத்த திரவியத்தைக் கொண்டு மதில், கோபுரம் முதலியவைகளைக் கட்டிவைத்தார்.

பின்பு தமது மனைவியாரோடு தமது ஊருக்கு வந்து சேர்ந்தார். இந்த ஊர் பெருமாளுக்கு ஊழியஞ் செய்த பின் யோகநிஷ்டையிலிருந்தார். கடைசியில் சிவலோகம் சேர்ந்தனர்.



## 18. மகம்மதுகஜினி.

### மகம்மதியர்கள் வருகை.

குழந்தைகள் : அப்பா ! சேர சோழ பாண்டிய ராஜ்யங்களெல்லாம் என்ன ஆய்விட்டன ?

தக :-இவைகளை எல்லாம மகம்மதியர்கள் கைக்கொண்டனர்.

குழ :-மகம்மதியர்கள் யார் ? எப்படி இங்கு வந்தார்கள் ? அவர்களைப்பற்றி சொல்லுங்கள்

தக :—ஏறக்குறைய 1,300 வருஷங்களுக்குமுன் அராபியாதேசத்தில் மகம்மது என்ற மகா புருஷர் இருந்தார். அவர் ஒரு புதிய மதத்தைப போதித்தார். இம்மதத்தை அநுசரித்தவர்களெல்லோரும் மகம்மதியர்கள்.

குழந்தைகளே ! அரேபியாவிலுள்ள மகம்மதியர்கள் பெர்ஷியா, துர்க்கி, ஆப்கானிஸ்தானம முதலிய இடங்களுக்கு வந்தார்கள். அவ்விடங்களிலுள்ள ஜனங்களை மகம்மதிய மதத்தில் சேர்த்துக்கொண்டார்கள். இவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து, தங்களுக்கு வேண்டிய தேசங்களைப் பிடித்துக்கொண்டு ஆண்டுவந்தார்கள். ஒரு வகுப்பார் ஆப்கானிஸ்தானத்தில் கஜினியை முக்கிய பட்டணமாகச் செய்து கொண்டு அதை ஆண்டுவந்தார்கள். அவர்களில் முக்கியமானவர் **மகம்மதுகஜினி** என்பவர்.

மகம்மதுகஜினி, தமது இளம்பிராயத்தில் கஜினி வழியாக அநேக வியாபாரிகள் விலையுயர்ந்த சாமான்களை ஒட்டகங்களின்பேரில் போட்டுக்கொண்டு இந்தியாவிலிருந்து திரும்பிப்போவதைப் பார்த்துக்கொண்டிருப்பது வழக்கம். இவர்

அப்பொழுது இவ்வியாபாரிகளிடம் சென்று ‘ எங்கிருந்து வருகிறீர்கள்? ஏது இவ்வளவு மூட்டைகள் ’ என்று கேட்பார்.

அவர்கள், “நாங்கள் இந்தியாவிலிருந்து வருகிறோம் ; அங்கு பொன், வெள்ளி, நகைகள், பட்டு வஸ்திரங்கள் இவை ஏராளமாயிருக்கின்றன. அவ்வித விலையுயர்ந்த சாமான்களைக் கொண்டுவருகிறோம்” என்பார்கள்.

அதுகேட்ட கஜினி “நான் அரசனானால் இந்தியாவிற்குப் போய் நீங்கள் கொண்டுவந்ததைப் பார்க்கிலும் அதிக விலையுயர்ந்த சாமான்களைக்கொண்டு வருவேன்” என்பாராம்.

மகம்மதுக்கு பதினாறு வயதானதும் இவர் அரசராய்விட்டார் உடனே இந்தியாவின்மீது படையெடுத்து திரண்ட திரவியத்தைக் கொள்ளையடித்துக்கொண்டு தம் தேசத்திற்குத் திரும்பிப்போனார்

இவ்விதம், இவர் ஏறக்குறைய பதினெட்டு தடவை இந்தியாவின்மீது படையெடுத்தார். இந்தியாவில் வடக்கிலுள்ள முக்கிய பட்டணங்களாகிய நகேசுவரம, காஞேஜ், வடமதுரை முதலிய விடங்களிலுள்ள கோயில் நகைகளையும் திரவியத்தையும கொள்ளைகொண்டு போனார் அநேக பட்டணங்களை நாசமாக்கிவிட்டார்.

குஜராத்தில் துவாரகைக்கருகில் **சோமநாதன்** ஆலயமொன்று இருந்தது. அதில் எங்குபார்த்தாலும் பொன்னால் கதவுகளும, தூண்களும் செய்யப்பட்டிருந்தன. அக்கோயிலில் திரவியமும் ஏராளமாக விருந்தது. அதுபற்றி மகமமது, கூர்ஜரத்திற்கு வந்து சண்டைசெய்தார். மகம்மது, கோயிலுக்குள்போய் லிங்கத்தை உடைக்கப்போனார். பிராமணர்கள், ‘ அதை உடைக்கவேண்டாம், ஏராளமான திரவியம் கொடுக்கிறோம் ’ என்று கெஞ்சிக் கேட்டார்கள்

மகம்மது, “நான் விக்கிரகத்தை உடைக்கத்தான் வந்திருக்கிறேன். ஆகையால் அதை இப்பொழுதே உடைப்பேன்” என்று சொல்லித் தம் கையிலிருந்த இரும்பு ஆயுதத்தால் அதை உடைத்தார். அதிலிருந்து பற்பல ரத்தினங்களும், பவழங்களும், முத்துக்களும் உதிர்ந்தன. மகம்மது அவை

களையும், பொன், வெள்ளிநாணயம் முதலியவைகளையும் வாரி எடுத்துக்கொண்டு தம் தேசத்திற்குத திரும்பிப்போனார்.

ராமன்:—'அப்பா! மகம்மதுகஜினி விக்கிரகங்களை உடைத்தும, கோயில்களிலுள்ளவைகளைக் கொள்ளையடித்தும், அநேக பட்டணங்களையும பாழாக்கிவிட்டானன்றோ? இவர் நல்ல அரசரா?'

தக:—'குழந்தைகளே! இவைகளால் அவரைக் கெட்டவ ரென்று சொல்லக்கூடாது சுய மதவைராக்கியத்தாலும் பண ஆசையாலும் அவ்விதம் செய்தாரேயன்றி, வேறொன்றினாலு மன்று அவர் கஜினியில் அநேக மசூதிகளையும், அரண்மனை களையும, புஸ்தகசாலைகளையும கட்டிவைத்தார விததுவான் களை வரவழைத்து ஏராளமாகத் திரவியம கொடுத்து உதவி னார். ஒரு சர்வகலாசாலையை ஸ்தாபித்தார் அதற்கு வேண் டிய திரவியம் கொடுத்தார் குளங்களையும, கிணறுகளையும வெட்டிவைத்தார் தம ஜனங்களுக்கு வேண்டிய நன்மை களைச் செய்துவந்தார்

இவைகளுக்கு உதாரணமாக ஒரு கதை சொல்லுகிறேன கேளுங்கள முன்காலத்தில் வியாபாரிகள், கூட்டம கூட்ட மாகச சாமான்களை ஒட்டகங்களின்மீது போட்டுக்கொண்டு போவதுவழக்கம் ஒருசமயம் வியாபாரிகள் ஒரு பட்டணம வழியாகப் போகும்பொழுது, திருடர்கள் அவ்வியாபாரிகளை யெல்லாம் கொன்றுவிட்டு அவர்களது சாமான்களை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். இறநதுபோன ஒரு வியாபாரி யின் தாயார் மகம்மதுகஜினியிருக்கும் பட்டணததிற்கு நடநதுபோய் அவரைக் கண்டு தனக்கு நேரிட்ட துககததை யும் நஷ்டத்தையும் தெரிவிததாள்.

"ஸ்திரீயே! அவ்வளவு தூரத்திலுள்ள பட்டணத்தில் எவ்விதம் சரியான ஏற்பாடு நான் செய்ய முடியும்? நான் திரு டர்களை அடக்கவும் முடியாது, பாதைகளையும் பநதோபஸ்து செய்யவும் முடியாது" என்று அவர் சொன்னாராம்

"ராஜாவே! உங்களுக்கு அரசுபுரியச் சக்தியில்லையே! ஏன் அவ்வித ராஜ்யங்களைப் பிடித்துக்கொண்டீர்கள்? அநி யாயமாய் அரசுபுரிந்தால் கடவுளுக்கு என்ன பதில் சொல் வீர்கள்?" என்று தைரியத்துடன் அவள் அரசனைக்கேட்டாள்.

உடனே மகமமது கஜினிக்கு அந்த ஸ்திரீ சொன்னது உண்மையென்றும் நியாயமென்றும் தெரிந்தது. அவள் பிள்ளை இழந்ததற்கு அவர் மிகவும் வருந்தி, களவுபோன சாமான்களுக்குப் பதிலாகத் திரவியம் கொடுத்து உதவினுர். பிறகு உத்தியோகஸ்தர்களை அனுப்பி அத்தேசத்தைச் சரியாய் ஆண்டுவரும்படி அவர் உத்தரவு செய்தாராம்

## 19. ராஜபுத்திரர்கள்.

### அவர்களுடைய குணம், பராக்கிரமம் ஐக்கியமின்மை முதலியவைகள்.

குழந்தைகள் :—அப்பா! மகம்மதுகஜினி பதினெட்டு தடவை இந்தியாவின்மீது படையெடுத்து வந்தாரே! அப்பொழுது வட இந்தியாவில் ஒருவர்கூட அவரை எதிர்க்கவில்லையா ?

தக :—அநேக ராஜபுத்திர வீரர்கள் அவரை எதிர்த்தார்கள். ஒன்றும் பயன்படாமற்போயிற்று

குழ :—ஏனப்பா பயன்படாமற்போயிற்று ? இவ்விராஜபுத்திரர்கள் யார் ? சொல்லுங்களேன்

தக :—மகம்மதியர்கள் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தபொழுது சிந்து, பஞ்சாப் முதலிய விடங்களில் அநேக இந்து ராஜாங்கங்களிருந்தன. அவ்விராஜ்யங்களிலிருந்த ஜனங்கள்தான் ராஜபுத்திரர்கள். இவர்களுடைய பூர்வோத்தரத்தைக்குறித்து ஒன்றும் நிச்சயமாகச் சொல்வதற்கிடமில்லை. சிலர் அக்னி குலத்தவரென்றும், இன்னும் சிலர் இவர்கள் சூரிய சந்திர வம்சத்தவரென்றும் சொல்லிக்கொள்ளுகிறுர்கள்.

ஆனுல் இவர்களெல்லோரும் அதிவீரபராக்கிரமசாலிகள் சண்டையில் புறங்காட்டி ஓடுவதே இல்லை. இவர்களுடைய விரோதிகள் இவர்களை ஜயிக்கும்படியான தருணமாயிருந்தால் தங்கள் தங்கள ஸ்திரீகளையெல்லாம் அக்னிப்ரவேசம் செய்

யச்சொல்லி தாங்கள் போர் முன்னிலையில் அதிவீரத்துடன் சண்டைசெய்து கத்தியும் கையுமாகத்தான் உயிர்துறப்பார்கள்.

இவர்கள் தாழ்ந்தவர்களை உபத்திரவம் செய்யமாட்டார்கள். நம்பினவர்களை இவர்கள் கைவிடமாட்டார்கள். அதர்மத்தை வெறுத்துவந்தார்கள் ஆனால் இவர்களுக்குள் ஐக்கியமென்பதே கிடையாது. இதுதான் இவர்களுடைய நாசத்திற்குக் காரணமாய் ஏற்பட்டது அது பின்வரும் சரித்திரத்தால் நன்கு விளங்கும் :—

## 20. மகம்மதுகோரி.

### ப்ருதிவிராஜன்.

மகம்மதுகஜினிக்குப்பின் மகம்மதுகோரி என்பவர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். கோரி என்பது ஒரு பட்டணம் அது ஆப்கானிஸ்தானத்தில் கஜினிக்கும ஹீரட்டுக்கும இடையில் இருக்கும் சிறிய பட்டணம். மகமமது, கோரி வம்சத்தைச் சேர்ந்தவர் ; இவர் யுத்தவீரர் ; இவருக்கு இந்தியாவுக்கு வரவேண்டுமென்ற எண்ணம் உண்டானது. ஆகையால் திரண்ட சேனையுடன் பஞ்சாபுக்கு வந்தார்.

அப்பொழுது டெல்லியில் அநங்கபாலனும, ஆஜ்மீரில் ப்ருதிவி ராஜாவும், பாஞ்சாலம் என்னும் கன்னோசி நாட்டில் ஐயச்சந்திரரும் அரசுபுரிந்து வந்தார்கள். இம்மூவரும் உறவினர். அநங்கபாலனுக்குப் பிள்ளையில்லை அவர் இறப்பதற்குமுன் தமக்கு அதிக பிரியமுள்ள தம பேரனாகிய ப்ருதிவியை டெல்லிக்கும் அரசனாகச் செய்தார். ப்ருதிவியோ சாமர்த்தியத்துடன் டெல்லியையும் ஆஜ்மீரையும் செவ்வனே ஆண்டு வந்தார்.

ஐயச்சந்திரரும் அநங்கபாலனுக்குப் பேரன். தன் பாட்டன், டெல்லியைத் தனக்குக் கொடுக்காமல் ப்ருதிவிக்குக் கொடுத்தமையால் ஐயச்சந்திரனுக்கு கோபமுண்டாயிற்று. ஆனதுபற்றி இவர் ப்ருதிவிக்கு விரோதியாயிருந்தார்.

நிற்க, மகம்மதுகோரி பஞ்சாபுக்குவந்தார் என்று முன்னே சொன்னேன் அல்லவா? ராஜபுத்திரர்கள் தங்களுக்கு ப்ருதிவியைத் தலைவராக வைத்துக்கொண்டார்கள். டெல்லிக்கு வடக்கே டிரௌரியில் (சிலர் டாராவரி என்றும் சொல்லுகிறார்கள். Tiroo-ri)—யுத்தம் நடந்தது அதில் மகம்மதுகோரி தோல்வி யடைந்தார். அநேகர் இறந்தார்கள். மீதியுள்ள சேனையுடன், மகம்மதுகோரி ஓடிப்போய்விட்டார்.

ப்ருதிவிராஜனுக்கு ஜயமுண்டானது ஜயச்சந்திரருக்கு எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்தால் எவ்விதம தகதக வென்று எரியுமோ அவ்விதம் கோபம விருத்தியடைந்தது.

## ராணி சம்யுக்தா.

'ஜயச்சந்திரருக்கு ஒரு பெண் உண்டு அவள் பெயர் **சம்யுக்தா.** அவள புத்தியுள்ளவள். அவளிடத்தில் தெய்வபக்தியும நற்குணங்களும உண்டு அவள தகப்பனார் அவளுக்குக் கலியாணம செய்ய சுயம்வரம ஏற்படுத்தினார். அசசமயத்தில எல்லாத் தேசத்து ராஜாக்களும வந்திருந்தார்கள். ப்ருதிவிராஜன் மாத்திரம் வரவில்லை. ஆகவே ஜயச்சந்திரர் அவனை அவமானப் படுத்துவதற்கென்றே அவனைப்போல ஒரு பிரதிமை செய்து மண்டபத்தின் வாசற்படியண்டை வைத்து அதற்கு வேலைக்காரன் உடுப்புகளையும் போட்டுவைத்தார்.

சம்யுக்தா தனது தோழிகளுடன் சுயம்வர மண்டபத்திற்குள் வந்தாள். சுற்றிலுமுள்ள இராஜாக்களைப் பார்த்தாள். கடைசியில் ப்ருதிவிராஜாவின் பிரதிமையைக் கண்டாள் தனது கழுத்தில் அணிந்திருந்த பூ மாலையை எடுத்து அப்பிரதிமையின் கழுத்தில் சாத்தினாள்.

அங்கிருந்த ராஜாக்கள், "ஐயோ! இப்படிச செய்யலாமா? இது என்ன அநியாயம்!" என்றார்கள். ஜயச்சந்திரருக்குக் கோபம் அதிகமாயிற்று. ப்ருதிவியோ மாறுவேஷம் போட்டுக்கொண்டு அம்மண்டபத்திற்கு வெளியில் நின்றுகொண்டிருந்தார். ஒருவருக்கும் ப்ருதிவி அவ்வூருக்கு வந்திருப்பது தெரியாது. இவருடன் 100 சிப்பாய்கள் பிச்சைக்காரர்களைப் போல் வேஷம்பூண்டு வெளியில் நின்றுகொண்டிருந்தார்கள்.



ப்ருதிவிராஜாவும், ராணி சமயுக்தாவும்.

சம்யுக்தா இவ்விதம் ப்ரதிமைக்கு மாலையைச் சூட்டின தைப் பார்த்திருந்த ப்ருதிவிராஜன், சரேலென்று உட்புகுந்து சம்யுக்தாவை அழைத்துக்கொண்டு வெளியில் வந்தார். தயா ராயிருந்த குதிரையின்மேல் இருவரும் உடனே ஏறினார்கள். குதிரை வாயுவேகம் மனோவேகமாய்ப் போயிற்று பிச்சைக் கார வேஷம்பூண்ட சிப்பாய்களும் பின்தொடர்ந்தார்கள்.

ஜயச்சந்திரர் ப்ருதிவியைப் பின்தொடர முடியவில்லை. ப்ருதிவி சம்யுக்தாவுடன் க்ஷேமமாய் டெல்லிக்கு வந்தார். ஒரு சுப தினத்தில் இவ்விருவருக்கும் விவாகம் நடந்தது.

**கமலா:**—'அப்பா! சம்யுக்தா தானே தனக்கு இஷ்ட மான கணவனை ஏன் தேடிக்கொண்டாள்? அதன் விவரம் யாது?

**தக:**—'முன்காலத்தில் ராஜாக்கள் சுயம்வரம் நடத்துவது வழக்கம். ராஜாக்கள் அதற்கு வருவார்கள் அப்பொழுது ராஜகன்னிகை தன் மனதுக்கு திருப்தியான புருஷனைத் தேர்ந் தெடுப்பாள் சத்தியவான், அர்ச்சுனன், ஸ்ரீராமர் முதலியவர் களை இவ்விதமே ஸாவித்திரி, த்ரௌபதி, சீதாதேவி முதலிய வர்கள் விவாகம் செய்துகொண்டது உனக்குத் தெரியாதா?

**கமலா:**—'ஆம, அப்பா! எனக்குத தெரியும்; ஆனால் ஏன் சம்யுக்தா தன் தகப்பனது விரோதியைக் கலியாணம் செய்து கொண்டாள்?'

**தக:**—'ப்ருதிவி வீரபராக்கிரமமுள்ளவன்; அழகுள்ள வன்; விவேகி; இரண்டு ராஜ்யங்களுக்கு அரசன். மேலும் இவளுக்கு உறவு. அங்கு வந்த இதர இராஜாக்களுக்கு இவ்வித குணங்கள் இல்லை; ராஜ்யமும் பெரியதல்ல. ஆகை யால்தான் ப்ருதிவியை சம்யுக்தா மணம் புரிந்துகொண்டாள். ஆனதுபற்றி ஜயச்சந்திரருக்குக் கோபம் இன்னும் அதிக

## ப்ருதிவிசெய்த யுத்தம்

மகம்மதுகோரி, இரண்டு வருஷமானபின்பு, மறுபடியும் ப்ருதிவிராஜனோடு யுத்தம்புரியவந்தார். ஜயச்சந்திரர், மகம்மது கோரிக்குச் சகாயம் செய்யவில்லை. ஆயினும் மற்ற ராஜாக்களை ப்ருதிவிக்கு உதவிசெய்யாமலிருக்கும்படி செய்துவிட்டார். ஆனால் ப்ருதிவி மனந் தளரவில்லை. யமுனா நதிக்கரையில்

இருவருக்கும் யுத்தம் நடந்தது ப்ருதிவி தைரியத்துடன் போர் புரிந்தார்.

ராணி சம்யுக்தா, ஒரு வாலிப யுத்தவீரனைப்போல் வேஷம் பூண்டு, தன் தகப்பனாரிடத்திற்குச் சென்று, "இவ்விதம சத்ருவுக்கு உதவிபுரியலாமா? நமது நாட்டிற்கு உதவிபுரிய வேண்டாமா?" என்று கேட்டாள்

ஜயச்சந்திரருக்கு இது தெரிந்துவிட்டது தம பெண்தான் வேஷம்பூண்டு வந்திருக்கிறாள் என்று அறிந்து, "காரியம முந்திப்போய்விட்டது, நீ போய்விடு" என்றார்

சம்யுக்தா 'கடவுளேதுணை' என எண்ணிக்கொண்டு, தனது கணவனுக்குத் தைரிய வார்த்தைகளைச சொன்னாள் "நான் எனது நகருக்குச் சென்று ஸ்திரீகளைக் காப்பாற்றிவருகிறேன் அபஜயம் கிடைத்தால் ஊரை நாசமாக்கிவிட்டு நாஙகள அக்கினிப்பிரவேசம புரிவோம்" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டு அவள் நகரத்திற்குச் சென்றாள். அங்குபோய் ஸ்திரீகளுக்குச் சொல்லவேண்டிய புத்திமதிகளைச சொல்லிவிட்டு ஜயம கிடைக்கும்படி கடவுளைத துதிசெய்து வந்தாள்.

யுத்தம் கடுமையாய் நடந்தது. கடைசியில் மகமமதுகோரி ஜயித்தார் ப்ருதிவியைக் கோரி கொன்றுவிட்டார். இச்சங்கதி சம்யுக்தாவுக்குத் தெரிந்தவுடன் பட்டணத்திற்கு நெருப்பு வைத்துவிட்டுத் தானும் மற்ற ஸ்திரீகளும் அக்கினிக்கு இரை யானார்கள்

மகம்மதுகோரி, ஆஜ்மீர், டெல்லி நகரங்களைக் கைவச மாக்கிக்கொண்டார் திரும்பி தம சொநத தேசத்திற்குப் போனார். அடுத்த வருஷத்தில் இநதியாவுக்கு மறுபடியும வந்து ஜயச்சந்திரரை எதிர்த்து அவருடன் யுத்தம் புரிநதார். அதில் ஜயச்சந்திரர் தோல்வியடைநதார். அவரது ராஜ்யத தையும் பிடித்துக்கொண்டு அவரையும் கொலைபுரிநதார்.

மகம்மதுகோரிதான் மகம்மதிய ராஜ்ஜியத்தை இந்தியாவில் முதலில் ஸ்தாபித்தவர்.

**ராமு:**—'அப்பா! "கெடுவான் கேடுநினைப்பான்" என்ற பழமொழி ஜயச்சந்திரருக்கு சரியாயிருக்கிறது.'

**கமலா:**—'அப்பா! ராணி சம்யுக்தாவினுடைய தைரியமே தைரியம! தம கணவர் இறந்தார் என்று கேள்விப்பட்டதும் தம உயிரை விட்டுவிட்டாளே!'

**தக:**—'ஆம, அமமா! முன்காலத்தில் ராஜபுதநிர ஸ்திரீகள் இவ்விதமதான் செய்துவநதார்கள்.'

'குழநதைகளே! அடுத்தநாள் வேறு கதைசொல்லுகிறேன். நாழிகை அதிகமாய்விட்டது. நித்திரை செய்யப்போங்கள்.

## 21. அடிமை அரசர்கள்.

### குத்ப் உத்தீன்

**குழ:**— அபபா! ப்ருதிவிராஜனுக்குப் பிறகு வேறே யாரும மகம்மதியர்களை இநதியாவில் வராமல் தடுக்க முயல வில்லையா?

**தக:**—இல்லை.

**குழ:**—ஏன் அப்பா?

**தக:**— மகம்மதுகோரி கஜினிமகம்மதைப்போல் தம் சுயதேசத்திற்குத் திருமபிப்போக விரும்பவில்லை. இநதியா விலேயே யிருக்கத் தீர்மானித்தார் ஆனால் தாம ஜெயித்த நாடுகளுக்குப பிரதிநிதிகளை நியமித்தார் அவர்கள் அங் கங்கே செவ்வையாக அரசுபுரிநது வந்தார்கள் ஆகையால் ராஜபுதநிரர்கள் தலையெடுக்க முடியாமற் போயிற்று.

**குழ:**—சரி அப்பா! மகம்மதுகோரிக்குப் பிறகு யார் வடஇநதியாவில் அரசுபுரிந்தார்கள்?

**தக:**—குழந்தைகளே! **அடிமை அரசர்கள்** என்ற பேர் பெற்றவர்கள் அரசாண்டுவந்தார்கள்.

**குழ:**—அடிமை அரசர்கள் என்று அவர்களுக்கு ஏன் பெயர்?

**தக:**—அவர்களில் பெரும்பான்மையோர் அரசு புரிவ தற்கு முன் அடிமைகளாயிருந்தார்கள். அதனால்தான் அப் பெயர் உண்டாயிற்று.

குழ :— அவ்வடிமை அரசர்களைப்பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்.

தக :—அடிமை அரசர் வம்சத்தை ஸ்தாபித்தவர் குத்ப் உத்தீன். இவர் மகம்மது கோரியினிடத்தில் தமது இளம் பிராயமுதற்கொண்டு அடிமையாக விருந்தார் இவருடைய சாமர்த்தியத்தையும், புத்தி கூர்மையையும் கண்டு, மகம்மது கோரி இவரைத் தமது தளகர்த்தர்களி லொருவராக நிய



குதபீ ஸ்தூபி.

யித்தார். இந்து ஸ்தானத்தை ஜயித்தபிறகு தமது பிரதி நிதிகளில் ஒருவராக இவரை மகம்மதுகோரி ஏற்படுத்தினர். மகமமதுகோரி இறந்ததும், இவரே அரசராகிவிட்டார். இவர் தான் முதல்முதல் டெல்லியைப் பிரதான நகரமாகச்செய்தவர்.

இவர் டெல்லியில் அநேக அழகு பொருந்திய கட்டடங் களைக் கட்டிவைத்தார் அவைகளில் குத்பீ ஸ்தூபி மிகவும் உயரமுள்ளது. இப்பொழுதும் இது அவ்விடத்தி லிருக் கிறது குழந்தைகளே! இப்படத்தைப் பாருங்கள்

இவர் நான்கு வருஷகாலம்தான் அரசாண்டுவந்தார். இவர் தமது உத்தியோகஸ்தர்களிடத்தில் அன்பாயிருந்தார். அவர்களுக்கு மானிய நிலங்களையும் திரவியத்தையும் கொடுத்து உதவினர். குதிரையின்மேல் ஏறி பந்தாடுவதில் (Polo) இவருக்கு மிக்கபிரியம் ஒருநாள் அவ்விதம் பந் தாடும்பொழுது குதிரையிலிருந்து விழுந்து அதனல் சில நாட்களுக்குப்பின் இறநதார்.

இவருக்குப்பின் அநேக அடிமை அரசர்களிருநதார்கள். அவர்களில் ஒருவர் நாஸருத்தீன். இவர் தம் சொநத செல வுக்கு ராஜ்யவரும்படியிலிருநது ஒருதம்படிகூட எடுத்துக் கொள்ளவில்லை. ஆனல் இவர் புஸ்தகங்கள் எழுதி அவை களை விற்ருர், விற்றதனல் கிடைத்த வரும்படியைத் தம் சொந்த செலவுக்கு உபயோகித்து வந்தார்.

ஏனெனில் ஜனங்கள் வரியாகக்கொடுக்கும் திரவியத்தை ஜனங்களின் நிமித்தமே செலவிடவேண்டுமென்பது இவரது கொள்கை. இவருடைய மனைவியைத் தவிர இவருக்கு சமையல் செய்யவும் மற்ற வீட்டு அலுவல் செய்யவும் வேலைக் காரர்களில்லை.

குழ :—அப்பா! அடிமை அரசர்கள் சரித்திரம் நன்ரு யிருக்கிறது. இவர்கள் வம்சம் ஏன் நீடித்திருக்கவில்லை?

தக :—இவர்களில் கைக்குபாத் என்ருெருவர் அதிகமாக ராஜ்யகாரியங்களைச் சரிவர பார்த்துவரவில்லை. இவர் சதா குடிவெறியில் முழுகியிருந்தார். ஒருநாள் இவர் தம் தோட்

டத்தில் உல்லாசமாய் நடமாடிக்கொண் டிருக்கையில் கில்ஜி வம்சத்தைச் சேர்ந்த ஜலாலுத்தீன் என்பவர் இவரைக் கொன்று டெல்லி ராஜ்யத்திற்கு அரசரானார்.

## 22. அலாவுத்தீனும சித்தூர் முற்றுகையும்.

குழ:—அப்பா! கில்ஜி அரசர்களில் பெயர் பெற்றவர் யார்?

தக:—ஜலாலுத்தீனுடைய மருமகனாகிய அலாவுத்தீன்.

குழ:—அவரைப்பற்றி சொல்லுங்கள்.

தக:—குழந்தைகளே! இவருக்கு ராஜ்யத்தை ஆளுவதில் திறமையுண்டு. யுத்தம் புரிவதில் சமர்த்தர் இவர் டெல்லியில் அரசாண்டு வருங்காலத்தில் முகலாயர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார்கள். இவர்களை அலாவுத்தீன் எதிர்த்துத் துரத்திவிட்டார் இவ்விதம் இரண்டு மூன்று தரம் படையெடுத்துவந்த மொகலாயரை அலாவுத்தீன் தமது பெருத்த சேனையின் உதவியால் தோற்கடித்துவிட்டார்

உடனே அலாவுத்தீனுக்கு இவர்களுடைய பயம் நீங்கிற்று. குஜராத்துக்குப்போய் குஜராத் அரசனுடன் யுத்தம் புரிந்து அவனைத் தோற்கடித்தார். பின்பு அலாவுத்தீன் ராஜபுதனத்தைச் சுமார் நூறு வருஷங்களாக ஆண்டுவந்த ராஜபுத்திரர்களை ஜெயிக்கச் சென்றார்.

இவர்கள் மீவார் ராஜ்யத்திலிருந்தார்கள். இதற்கு முக்கிய பட்டணமாகிய சித்தூரில் பீமசிங்க் என்பவர் அரசு புரிந்துவந்தார்.

அலாவுத்தீன் தம்சேனையுடன் இவ்விராஜ்யத்திற்கு வந்து சித்தூரை வளைத்துக்கொண்டு யுத்தம் புரிய தயாராயிருப்பதை அறிந்த ராஜபுத்திர வீரர்கள் உடனே யுத்தம் புரிய வந்துவிட்டார்கள். இருவருக்கும் பலத்த யுத்தம் நடந்தது.

பீமசிங்க் என்பவருடைய மனைவியின் பெயர் பத்மினி. இவள் மிகவும் அழகு பொருந்தியவள். இவளை எவ்வித

மாயாவது அபகரித்து மணம்புரிய வேண்டுமென்று அலாவுத்தீன் விரும்பி ராஜபுத்திரர்களோடு யுத்தம் புரிந்துகொண்டேயிருந்தார் இருபக்கத்திலும் அநேகர் யுத்தகளத்தில் மடிந்தார்கள் பீமசிங்க் கடைசியில் சமாதானம் செய்துகொள்ள விரும்பி, அதிக திரவியம கொடுப்பதாக அலாவுத்தீனுக்குச் சொல்லியனுப்பினர்

அலாவுத்தீன் மனதில் கெட்ட எண்ணம் குடிகொண்டிருந்தமையால் பத்மினியை அனுப்பிவிட்டால் சமாதானம் செய்துகொள்ளலாம என்று பதில் அனுப்பினர்.

ராஜபுத்திரர்கள் கோபங்கொண்டு யுத்தம் செய்தார்கள். சுமார் ஒன்றரை வருஷம் யுத்தம் நடந்தது அலாவுத்தீன் "பத்மினியை ஒருதடவை நிலைக்கண்ணாடியின் மூலமாகப் பார்க்கும்படி தமக்கு அனுமதி கொடுத்தால், தாம சமாதானம் செய்துகொள்ளத் தடையில்லை" என்று சொன்னர்

ராஜபுத்திரர்கள் இதற்குச் சம்மதிக்கவே, யுத்தம் நின்றது.

பின்பு ஒருநாள் அலாவுத்தீன் பீமசிங்க் அரண்மனைக்குப் போய் பத்மினியைப் பார்த்தார். பீமசிங்கை தம் கூடாரத்திற்கு ஒருதினம் வரும்படியும் வேண்டிக்கொண்டார் அவ்விதமே பீமசிங்க் அலாவுத்தீனைப் பார்க்கச் சென்றார் உடனே கபடமுள்ள அலாவுத்தீன் அவரைப பிடித்து சிறைச்சாலையில் வைத்துவிட்டார்.

ராஜபுத்திரர்கள் இச்சங்கதியைக்கேட்டு மிகவும் விசனப்பட்டார்கள். பத்மினி தம் கணவரைக் காப்பாற்ற பற்பல வழிகளைப்பற்றி யோசித்தாள். கடைசியாக "ஐயா, நான் தங்களைப்பார்க்க வருகிறேன். என் கணவரை ஒன்றும்செய்யாமல் சித்தூருக்கு அனுப்பிவிடவேண்டும் என்னுடைய ஆயிரக்கணக்கான தாதிமார்கள் என் ஜீவியகாலம் வரையில் என்னிடத்திலிருக்க உத்திரவளிக்கவேண்டும்" என்று அலாவுத்தீனுக்கு ஒருகடிதம் எழுதினள்.

அலாவுத்தீன் மிகவும் மகிழ்ந்து, அவ்விதமே செய்யும்படி பதில் அளித்தார். பத்மினி மூடுபல்லக்கில் உட்கார்ந்து தைரியத்துடன் அலாவுத்தீனுடைய கூடாரத்திற்குப்

போனாள். இவளுடன் அநேக யுத்தவீரர்கள் கத்தியுடன் மூடுபல்லக்குகளில் சென்றார்கள்.

அலாவுத்தீன் பத்மினியைச் சந்திக்கவந்தார். பத்மினி இதையறிந்து, "சுல்தானே! என் கணவரை இனி நான் பார்க்க முடியாதாகையால் இப்பொழுது அவரைப்பார்க்க உத்திரவு வேண்டும்" என்றாள். அலாவுத்தீனும் உத்தரவு கொடுத்தார். பத்மினி தமது கணவரிருக்குமிடத்திற்கு வந்து, "ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளுங்கள் வெளிப்புறத்தில் குதிரைகளிருக்கின்றன. புறப்படுங்கள்" என்றாள்

காலதாமதமின்றி இருவரும் தயாராயிருந்த குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு துரிதமாய் வெளியில்போய் விட்டார்கள்

காவலாளிகள் சிறிதுநேரம் சென்றபின் இவ்விருவர்களும் அங்கில்லாததைக் கண்டு "பீமசிங் காணோம்" என்று கூவினார்கள்.

பல்லக்குகளிலிருந்த ராஜபுத்திர வீரர்கள் மகம்மதியர்களை உடனே எதிர்த்தார்கள் இவ்விதம் இவர்கள் எதிர்த்தமையால் மகம்மதியர்களுக்கு அவர்களைப் பின்தொடர சாவகாசமில்லை. இருவர்களுக்கும் யுத்தம் நடந்தது. ராஜபுத்திர சேனைத்தலைவன் யுத்தத்தில் மடிந்தான். ராஜபுத்திரர்கள் தங்கள் உயிரைக்கூட சிறிதும் கவனியாமல் யுத்தம்செய்து அநேகரைக் கொன்றார்கள். அவர்கள் அலாவுத்தீனைச் சித்தூரைவிட்டு துரத்திவிட முயன்று யுத்தம்புரிந்தார்கள் இதனால் அநேக ராஜபுத்திரர்கள் மடிந்தார்கள் அலாவுத்தீனுக்கு ஜயமுண்டாயிற்று.

இச்சங்கதி பத்மினிக்குத் தெரிந்தது. அவ்வூரிலுள்ள மாதர்களெல்லாம் பத்மினியுடன் நெருப்பில் விழுந்து உயிர் இழந்தார்கள்.

அலாவுத்தீன் பாழடைந்த சித்தூரை ஜெயித்ததற்காக சந்தோஷப்படவில்லை. சிலகாலஞ் சென்றபின் அலாவுத்தீன் மரணமடைந்தார்

இவர்காலத்தில் ஜனங்களுக்கு திருடர் பயமும், பிராண பயமுமில்லை. ராஜ்யத்தில்ஜனங்கள் வீடுவாசல்களை வைத்துக் கொண்டு சுகமாய் ஜீவிதது வந்தார்கள்.



## 23. டக்லக்கும் மகம்மதிய ராஜ்ய க்ஷீணதசையும்

### மகம்மத்டக்லக்

குழந்தைகள் : — அப்பா ! அலாவுத்தீனுக்குப்பின் டில்லியை அரசாண்டவர்களில் பேர் போனவர் யார் ?

தக :—மகம்மத்டக்லக்

குழ :—அவரைப்பற்றி சொல்லுங்கள்.

தக :—குழந்தைகளே ! மகம்மத்டக்லக் வானசாஸ்திரம், தர்க்கசாஸ்திரம் முதலியவைகளை நன்றாகப் படித்தார் கவிகளை எழுதினார். யுத்தம் புரிவதில் சாமர்த்தியமும் தைரியமும் பொருந்தியவர். தாம் நினைத்தபடி காரியங்களைச் செய்வார். அப்படி செய்வதினால் நன்மை விளையுமோ தீமை உண்டாகுமோ வென்பதைச் சிறிதும் ஆலோசிக்கமாட்டார். இவர் சிடுசிடுவென்று கோபித்துக் கொள்வார்

இவர் தம் சேனையைப் பலப்படுத்தி தக்ஷிணதேசத்தில் அநேக பாகங்களைக் கைவசமாக்கிக் கொண்டார் அச்சமயம் மொகலாயர்கள் வந்து தொந்திரவு செய்துகொண் டிருந்தார்கள் இவர்களுக்கு பொக்கிஷத்திலிருக்கும் பணத்தையெல்லாம் கொடுத்து பஞ்சாப்பிற்கப்பால் திரும்பிப் போகும படி செய்தார். பணமில்லாமையால் குடிகளுக்கு நிலவரியை உயர்த்தினார். அவர்களில் அநேகர் இவ்வரியைக்கட்ட சக்தியற்றவர்களா யிருந்தார்கள். ஆகையால் அவர்கள் தங்கள் வீடுகளை விட்டு காடுகளுக்கு ஓடிப்போய் விட்டார்கள். இவருக்கு கோபம் உண்டாயிற்று. மிருகங்களை வேட்டையாடுவதுபோல் இவர் சேனையுடன் காட்டுக்குச்சென்று ஏழை ஜனங்களை வேட்டையாடிக் கொலைபுரிந்தார்.

டில்லிக்கு எண்ணூறு மைலுக்கப்பால் தேவகிரியை முக்கியப் பட்டணமாகச் செய்ய நினைத்தார். அதற்கு தௌளா

தாபாத் என்ற பெயரிட்டு தம் தேசத்து பிரஜைகளை டில்லியை விட்டு உடனே புறப்பட்டு அவ்விடத்திற்குப் போகும்படி கண்டிப்பான உத்திரவு செய்தார்.

பிரஜைகள் தங்கள் சாமான்களையெல்லாம் எடுத்துக்கொண்டு வெகு கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு அப்புதிய பட்டணத்திற்குப் போனார்கள். வழியில் அநேகர் மடிந்தார்கள். சிலர்தான் வந்து சேர்ந்தார்கள். பஞ்சமும், கொள்ளை நோய் முதலியவைகளும் உண்டாயின. மறுபடியும் மீதியுள்ள ஜனங்களை டில்லிக்குத் திரும்பிப்போகும்படி இவர் சொன்னார்.

பொக்கிஷத்திலோ பணமில்லை. இவர் செம்பு நாணயங்களைச் செய்வித்து அவைகளை வழங்கிவரும்படி பிரஜைகளைக் கட்டாயப்படுத்தினார். சிறிதுகாலம் இந்த நாணயம் வழங்கப் பட்டுவந்தது. அந்நியதேசத்து வியாபாரிகள் இந்த நாணயத்தைப்பெற சம்மதிக்கவில்லை. பேராசைக்காரர்களும் திருடர்களும் திருட்டுத்தனமாய் பொய் நாணயங்களைச் செய்து குவியல் குவியலாக பணம் சேகரித்து வந்தார்கள். இவைகளால் பஞ்சமுண்டாயிற்று. வியாபாரம் நின்றுவிட்டது. ஜனங்கள் அதிக ஏழ்மையடைந்து பல கஷ்டங்களை அனுபவித்தார்கள்.

இவர் பாரசீகம், சீனு முதலிய தேசங்களின்மீது படை எடுத்தார். இவ்விதம் செய்தமையால் சேனைகள் மடிந்தன. டெக்கானில் இவருக்கு விரோதமாகக் கலகம் உண்டாயிற்று. வங்காளத்தின் கீழ்மாகாணமும், டெக்கானும் இவருக்கு அடங்காமல் சுவாதீனத்தை அடைந்தன. இச்சமயத்தில் டக்லக் இறந்தார்.

இவருக்குப்பின் (Firoz Shaw) பீருஜ்ஷா பட்டத்திற்கு வந்தார். இவர் தம் பிரஜைகளுக்கு நன்மை செய்துவந்தார். புதிய நாடுகளை ஜயிக்கவேண்டுமென்று இவர் விரும்பவில்லை. இவருடைய ஆளுகையைக் கண்டு ஜனங்கள் சந்தோஷப்பட்டார்கள். இவர் ஜனங்களுக்கு கல்விச்சாலை, வைத்தியசாலை முதலியவைகளை ஸ்தாபித்தார். பயிர் நிலங்களுக்கு நீர்ப்

பாய்ச்சலுக்காக யமுனு நதியிலிருந்தும், சட்லீஜ் நதியிலிருந்தும் வாய்க்கால்களை வெட்டிவைத்தார். தேவையான இடங்களில் குளங்களையும் வெட்டி வைத்தார். இவர் இவ்வித உதவி செய்தமையால் ஜனங்கள் பயிர்த்தொழில் செய்து ஜீவித்து வந்தார்கள்.

முன்னிருந்த பலவரிகளை இவர் எடுத்துவிட்டார் இவரை யாவரும் புகழ்ந்துவந்தார்கள் ஆனால் இவர் ஆளுகைக் குட்பட்டிருந்த ராஜ்யமோ மிகவும் குன்றிவிட்டது. ஏனெனில், மகமது டக்லக் ஆண்டுகொண் டிருக்கும்பொழுது அநேக பாகங்கள் அவரது குரூரமான நடவடிக்கைகளைப் பொறுக்கமாட்டாமல் டில்லி ராஜ்யத்திலிருந்து விலகிவிட்டன. மேலும் பிரோஜ் டக்லக்குக்குப்பின் வந்தவர்கள் சக்தியற்றவர்கள். அவர்களால் தங்களது ராஜ்யத்தை விஸ்தரிக்க முடியவில்லை நாளுக்குநாள் மகமதிய ராஜ்யம் க்ஷீணதசையடைந்துவந்தது. அப்பொழுது மொகலாயர்கள் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தார்கள்

குழ:—அப்பா! மொகலாயர்கள் எந்த வீரனைத் தலைவனுகக் கொண்டு இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார்கள்?

தக:—தைமூா

குழ:—அவரைப்பற்றி சொல்லுங்கள்.

தக:—நாளைதினம் சொல்லுகிறேன்.

## 24. தைமூர்.

தக:—குழந்தைகளே! தைமூரைப்பற்றி இன்று சொல்லுகிறேன். கேளுங்கள். தைமூா துருக்கி தேசத்தைச் சேர்ந்தவர், இவர் தேகபலமுள்ளவர் இவரிடத்தில் தயை என்பது கிடையாது. ஜனங்களைக் கொலைபுரிந்து அவர்களுடைய பொருள்களை அபகரிப்பதுதான் இவருக்கு இஷ்டம்.

இவர் பெருத்த சைனியத்தைச் சேர்த்துக்கொண்டு பாரசீகம், தார்த்தாரி, துருக்கி முதலிய நாடுகளை ஜயித்தார். பின்பு சிந்துநதியைக் கடந்து முல்டான், லாஹூர் முதலிய

விடங்களிலுள்ள ஜனங்களைக் கொலைபுரிந்ததுடன் அவர்களுடைய பொருள்களையெல்லாம் கொள்ளையடித்தார். டில்லிக்குச் சென்று அவ்வரசனுடன் யுத்தம் புரிந்தார். டில்லி அரசன் தோல்வியடைந்து உயிர் தப்பினால் போதுமென்று ஓடிப் போய்விட்டான்.

தைமூர் டில்லியைப் பிடித்துக்கொண்டு தாம் சக்கரவர்த்தியென்று யாவருக்கும் தெரியப்படுத்தினார் இவருடைய சேனையிலுள்ளவர்கள் அப்பட்டணத்தைக் கொள்ளையடித்தார்கள் அநேகரைக் கொலை செய்தார்கள். ஜனங்கள் தைமூர் வந்துவிட்டார் என்று கேள்விப்பட்டால் போதும். நடுநடுங்கினார்கள். கடைசியாக தைமூர் திரண்ட திரவியத்தை எடுத்துக்கொண்டு துர்க்கி ஸ்தானத்திற்குப் போய்விட்டார்.

## 25. விஜயநகர்.

குழந்தைகள் :—அப்பா! தைமூர் துர்க்கி ஸ்தானத்திற்குத் திரும்பிப் போனபிறகு டில்லிராஜ்யம் மறுபடியும் உன்னத ஸ்திதிக்கு வந்ததா ?

தக :—ஆம், வந்தது

குழ :—எப்பொழுது ?

தக :—தைமூர் திரும்பிப்போன சுமார் நூற்றைம்பது வருஷத்துக் கப்பால்.

குழ :—அது ஏன் ? அப்பா !

தக :—மகமது டக்லக் காலத்திலேயே டில்லி ராஜ்யத்தின் விஸ்தீரணம் குறைய ஆரம்பித்தது. அவருக்குப்பின் வல்லமையுள்ள அரசர்களில்லை. ஆனதுபற்றி அநேக மகமதிய ராஜ்யங்களும் இந்துராஜ்யங்களும் உண்டாயின.

குழ :—எங்கெங்கே இந்துராஜ்யங்கள் உண்டாயின ?

தக :—ராஜபுதனம், தென் இந்தியா முதலியவிடங்களில்

குழ :—தென் இந்தியாவில் உண்டான இந்துராஜ்யத்தைப் பற்றி சொல்லுங்கள், அப்பா !

தக :—தென் இந்தியாவில் துங்கபத்திரா நதியின் தக்ஷிணக் கரையில் ஹரிஹரன் என்பவரும், அவருடைய சகோதரரும் விஜயநகர் என்ற பட்டணத்தை ஸ்தாபித்தார்கள் விஜயநகர் என்ற பதத்திற்கு ஜயம் கொண்டநகரம் என்றர்த்தம். இந் நகரம் சுமார் பத்து சதுரமைல் விஸ்தீரணமுள்ளது இது மிகவும் செழிப்பாயிருந்தது. உன்னதமானவும் பலமுள்ளவுமான மதில்களால் இது சூழப்பட்டிருந்தது.

இந்நகரத்தில் அநேக அழகான ஆலயங்களும், சபாமண்டபங்களும், இன்னும் வெகு நேர்த்தியான அரண்மனைகளும், கட்டடங்களுமிருந்தன இந்நகரத்தின் தெருக்களின் அழகே அழகு. பற்பலவிடங்களிலிருந்து இந்நகரத்திற்கு வந்து கொண்டிருந்த வியாபாரிகளுடைய தொகை கணக்கிடக் கூடாமலிருந்ததாம் இவர்களில் அநேகர் ஐரோப்பியதேசத்து வர்த்தகர்கள்.

இந்நகரத்தரசனுடைய சதுர்வித சைனியங்கள் நிரம்ப கீர்த்திபெற்றிருந்தன. ஆனதுபற்றி விஜயநகரம் உண்டான சிறிது காலத்திற்கெல்லாம தென்இந்தியா முழுமையும் இவ்வரசனுக்கு உட்பட்டிருந்தன ஆனால் இந்நகரத்திற்கு வடக்கேயிருந்த மகமதியர்களும், இவ்விஜயநகர ராஜாக்களும அடிக்கடி யுத்தம் செய்தார்கள் வெகுநாள்வரையில் விஜயநகர ராஜாக்களை மகமதியர்கள் வெல்ல எவ்வளவோ பிரயத்தனம் செய்தும் அது பயன்படாமற்போயிற்று

ஆயினும் ராமராஜா என்பவர் விஜயநகர ராஜ்யத்தை ஆண்டபொழுது இவருக்கும் மகமதியர்களுக்கும் பெருத்த யுத்தம் தாளிக்கோட்டை என்னுமிடத்தில் நடந்தது. அதில் ராமராஜா கொல்லப்பட்டார்.

இந்த ராஜ்யம் மகமதியர் வசமாயிற்று இந்த நகரத்தை தங்களாலியன்றமட்டும் மகமதியர்கள் நாசமாக்கினார்கள். இங்கிருந்த பலமான கட்டடங்களை முற்றிலும் அழிக்க இவர்களால் முடியவில்லை. இவ்விதம் அழிவுற்றிருக்கிற மாடமாளிகைகளையும், கூடகோபுரங்களையும், கோட்டை மதில்களையும், இன்னும் அநேக கட்டடங்களையும் இப்பொழுதும் பெல்லாரி ஜில்லாவில் ஓஸ்பேட் தாலூக்காவில் ஹம்பி என்ற சிறிய கிராமத்திற்குச் சமீபத்தில் காணலாம்.

குழந்தைகளே! இவ்விதம் அழிவுற்றிருக்கிற காட்சியைப் பார்ப்போருக்கு அதிசயம் விளைவிப்பதாயிருந்தால் அவை அழிவுற்றிராமலிருந்தபொழுது எவ்வாறிருந்திருக்கும் என்பதை நீங்களே அறிந்துகொள்ளலாம்.

## 26. அதிதைரியமுள்ள பாபர்.

**குழந்தைகள்** :—அப்பா! விஜயநகர ராஜ்யத்தை மகமதியர்கள் ஜயித்தார்களே. இவர்களா மறுபடியும் டில்லியில் பிரபலமான ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள்?

தக :—இல்லை

குழ :—அவர்கள் யார்? எங்கிருந்து வந்தார்கள்? இவைகளைப்பற்றி சொல்லுங்கள்.

தக :—விஜயநகர ராஜ்யம் மகா உன்னத ஸ்திதியிலிருந்தபொழுது டில்லி ராஜ்யம் மிகவும் குறுகியிருந்தது அதைச் சுற்றிலுமிருந்தவர்கள் இதர மகமதிய அரசர்கள். இவர்களுக்குள் ஒற்றுமையே கிடையாது. டில்லியில் இப்ராஹீம் லோடி என்ற மகமதிய அரசன் ஆண்டபொழுது அவனுடைய எதிரிகள் தைமூர் வம்சத்தைச் சேர்ந்த பாபர் என்பவரைத் தம்முடைய முகலாய சைனியத்தோடு தங்களுக்கு உதவிபுரிய வேண்டினார்கள்

பாபரும் அவ்விதமே சம்மதித்து வந்தார். பானிப்பட்டு என்றவிடத்தில் பெருத்த யுத்தம் நடந்தது. பாபர் இப்ராஹீம் லோடியைத் தோற்கடித்தார். உடனே டில்லி பாபர் கைவசமாயிற்று. பாபருக்கு டில்லியில் தம்முடைய ராஜ்



தைரியமுள்ள பாபர்.

யதனை ஸ்தாபிக்க ஆசை உண்டாயிற்று. அதைத் தடுக்க எத்தனையோ பேர் முயன்றார்கள் ஆனால் பாபரோ சிறந்தவீரர் அவருடைய எதிரிகளையெல்லாம் ஜயித்து வந்தார்

இவர் மிக்க பலசாலி. இவர் வெகுதூரம் குதிரைச் சவாரி செய்தபின் கங்காநதியின் ஒரு கரையிலிருந்து மற்றொரு கரைக்குச் சிறிதும் தளராமல் நீந்திச் சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது.

இவர் படித்தவர் தம்முடைய சரித்திரத்தைத் தாமே எழுதியிருக்கிறார். தம் பிரஜைகளின் சுகதுக்கங்களைத் தம தாகவே பாவிப்பார்.

இவர்தெய்வபக்தியுள்ளவர். இவருடைய மகனாகிய ஹுமாயூன் வியாதியால் வருந்தியபொழுது அவ்வியாதி தமக்கு வர வேண்டுமென்றும், தம்முடைய மகன் சுகமடைய வேண்டுமென்றும் கடவுளை வேண்டினார். அவ்விதமே நடந்தது.

## 27. மகா அக்பர்.

குழந்தைகள் :—அப்பா! பாபர் சரித்திரம் நன்றாயிருக்கிறது. ஆனால் அவர் காலத்தில் டில்லிராஜ்யம் உன்னத ஸ்திதியடைந்ததாகத் தெரியவில்லையே!

தக :—உண்மைதான். டில்லி ராஜ்யம் அக்பர் சக்கரவர்த்தி காலத்தில்தான் மிகுந்த உன்னத பதவியடைந்தது.

குழ :—அப்படியானால் அந்த அக்பர் சக்கரவர்த்தியைப் பற்றி சொல்லுங்கள்.

குழந்தைகளே! அக்பர் பேபரின் பேரன். இவர் தகப்பனார் இறந்தபொழுது இவருக்கு வயது பதின்மூன்று. ஆயினும் அக்பர், சக்கரவர்த்தி ஆனார். ஆனால் ஹுமாயூனுடைய சேனாதிபதியான பைராம் கான் அக்பருக்குப் பதிலாக அரசு புரிந்துவந்தார்.

அக்பர் அழகும், புத்தியும், பலமும், மனஉறுதியும், தைரியமும், பராக்கிரமமும் பொருந்தியவர். நியாயம் தவறாதவர்.

பற்பல வித்வான்களுடன் சம்பாஷித்து அநேக விஷயங்களைத் தெரிந்துகொண்டார். இவர் மிகவும் தைரியசாலி. முரட்டுத் தனம் சிறிதும் இவரிடத்தில் கிடையாது. கோபம் வந்தாலும், அபாயம நேரும் சமயத்திலும், பொறுமையுடனிருந்து யோசனை செய்வார். மதத்துவேஷமும இவரிடத்தில் கிடையாது.

அக்பருக்குத் தக்கவயது வநதவுடன் தாமே ராஜ்யத்தை ஆண்டுவர ஆரம்பித்தார். ஆகையால் பைராம்கான் கலகம செய்ய ஆரம்பித்தார் பெருந் தன்மையுள்ள அக்பர் பைராம்கானை மன்னித்துவிட்டார். பிறகு பைராம் கானுக்கு வேண்டிய பூஸ்திதி, பணம் முதலியவைகளைக் கொடுத்து மக்கா வுக்குப் போய் வரும்படியும் உதவி செய்தார். பைராம்கான் மக்காவுக் குப் போகும்வழியில் சில விரோதிகள் அவரைக் கொலைசெய்தார்கள்.


மகா அக்பர்.

அக்பர் அநேக ராஜ்யங்களைத் தமது ராஜ்யத்துடன் சேர்த்து வநதார் சித்தூர், குஜராத், காஷ்மீரம், வங்காளம, பீஹார், ஒரிஸ்ஸா முதலியவைகளைக் கைவசமாக்கிக்கொண்டார். ஆப்கனிஸ்தானத்தையும் பிடித்துக்கொண்டார். இவரது ராஜ்யம் இந்தியாவில் கோதாவரிக்கரை வரையில் பரவியிருநதது.

அக்பர் தோல்வியடைந்தவர்களைக் கொடூரமாய் நடத்தவில்லை. சிப்பாய்கள் கொள்ளையடிக்கக் கூடாதென்று சொல்லிவந்தார். பயிர் சாகுபடிசெய்யும் வயல்களுக்குச் சமீபத்தில் யுத்தம் நடந்தால், அவ்வயல்களுக்குக் கெடுதி ஒன்றும் உண்டாகாமல் காவல் வைத்துவந்தார். ஒரு சமயம் பயிருக்குக் கெடுதியுண்டானல் அவ்வயலின் சொந்தக்காரனுக்குப் பணம் கொடுத்தும் உதவி செய்வார்.

இந்துக்களும் மகம்மதியர்களும் ஒற்றுமையுடனிருக்கவேண்டுமென்று விரும்பினர். இதற்காக இவர் ராஜபுத்திர ஸ்தி

ரீயை மணம்புரிந்துகொண்டார். தமது குமாரனுக்கும் ஒரு ராஜபுத்திர கன்னிகையைவிவாகம் செய்துவைத்தார். இந்துக் களுக்குப் பெரிய உத்தியோகங்களைக் கொடுத்தார். ராஜ புத்திரராகிய ராஜா தோடர்மால் என்பவரை ராஜ்யவரு மான விசாரணைக்குரிய மந்திரியாக நியமித்தார் மான்ஸிங், பகவான்தாஸ் என்பவர்களை தமது சேனையில் தளகர்த்தர்க ளாக நியமித்தார்.

வித்துவான்களையும், மகமதிய மதாசாரியர்களையும், இந்து மதாசாரியர்களையும், ஐரோப்பியதேசத்து கிறிஸ்து மதாசாரி யர்களையும், பாரசீகதேசத்து பாரசீக மதாசாரியர்களையும் வர வழைத்துச் சாமாஜ்யமண்டபத்தில் ஒவ்வொரு மதத்தைப்பற்றியும் உபந்நியசிக்கச் செய்வார். இந்துக்கள் கட்டிவந்த ஜிஸியா என்ற பத வரியைத் தள்ளிவிட்டார். பசுவைக் கொல்லக் கூடாதென உத்தரவு செய்தார்

மேற்கூறிய நற்குணங்கள் அக்பரிடத்திலிருந்தன. இதனால் இவர் ராஜ்யத்தில் பிரஜைபயமும் திருடர் பயமுமில்லை. ஜனங்கள் சுகமாய் ஜீவித்துவந்தார்கள் அக்பர் கடைசியாகக் கடவுளைத் தியானம் செய்துகொண்டு உயிர் துறந்தார்.

குழ:—'அப்பா! அக்பர் மகமதிய அரசராச்சுதே! இவர் கோயில்களையும் இடிக்கவில்லை, விக்கிரகங்களையும் நாசமாக்க வில்லையே!'

தக:—'ஆம். இவர் வெகு நல்லவர் என்று முன்னேயே நான் சொல்லவில்லையா? மேலும், அவரவர்கள் தங்கள் தங்கள் மதத்தைத் தழுவிவருவதுதான் நியாயம் என்றும் எண்ணினார். இப்படியிருந்தமையால்தான் இவர் பெருந்தன்மையுள்ளவர் என்று பேரெடுத்தார்.

## 28. போர்ச்சுகீஸியர் வருகை.

குழந்தைகள்:—அப்பா! விஜயநகரத்தைப்பற்றி சொன்னபொழுது ஐரோப்பிய வியாபாரிகள் அநேகர் இந்தியாவி லிருந்தனரென்றும், அக்பர் சரித்திரத்தைக் கூறியபொழுது ஐரோப்பிய கிறிஸ்து மதாசாரியர்கள் இத்தேசத்திலிருந்தன

ரென்றும் சொன்னீர்களே. இவர்கள் எப்பொழுது எதற்காக இங்கு வந்தார்கள் ?

தக :—அநேக ஆயிரம் வருஷங்களாக இந்தியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் வியாபாரமுண்டு. மகமதியர்கள் கான்ஸ்டான்டி நோபிலைப் பிடித்தவுடன் இவ்விந்திய ஐரோப்பிய வியாபாரம் தடுக்கப்பட்டது. ஆகவே, ஐரோப்பியர்கள் இந்தியாவிற்கு புதிய வழி யொன்றைக் கண்டுபிடிக்க பிரயத்தனம் செய்தார்கள். அப்பொழுது போர்ச்சுகல் தேசத்து அரசர், **வாஸ்கோடி காமாவை** சமுத்திரமார்க்கமாக இந்தியாவுக்குப் போக வழியைக் கண்டுபிடிக்க, அதிக திரவியமும் மனிதர்களையும் கொடுத்து அனுப்பினார்.

இவர் ஒரு கப்பலில் வேண்டிய சாமான்களை எடுத்துக் கொண்டு பிரயாணமானார். ஆப்பிரிக்காதேசத்துக் கரையோரமாக வந்தார். நன்னம்பிக்கை முனையைச் (கேப் அவ் குட்ஹோப்) (Cape of Good Hope) சுற்றிக்கொண்டு இந்தியாவின் மேற்குக்கரையில் உள்ள (காலிக்கோட்டை—Calicut) கோழிக்கோட்டிற்கு வந்தார்.

கோழிக்கோட்டிலுள்ள (ஸாமொரின்) ராஜா அவரைப் பிரியமாக வரவழைத்தார். இங்கு வியாபாரம் செய்ய அவ்வூர் ராஜாவைக்கேட்டு உத்திரவு பெற்றுக்கொண்டார். உடனே இவர் இங்குள்ள வாசனைத் திரவியங்களாகிய, ஏலம், மிளகு, வால்மிளகு, ஜாதிக்காய் முதலியவைகளை விலைக்கு ஒரு கப்பல் நிரம்ப வாங்கிக்கொண்டு போர்ச்சுகல் தேசத்துக்குத் திரும்பிச்சென்றார். அங்குபோய் இவைகளையெல்லாம் அத்தேசத்து அரசருக்கும் ஜனங்களுக்கும் காட்டினார். கோழிக்கோட் ராஜா தம்மிடத்தில் சினேகபான்மையோடு யிருப்பதையும் தெரிவித்தார்.

உடனே போர்ச்சுகீஸியர் காலதாமதமின்றி ஒரு நேர்த்தியான கப்பலைத் தயார்செய்துகொண்டு இந்தியாவோடு வியாபாரம்செய்ய புதிய வழியில் பிரயாணமானார்கள். கப்பல் கோழிக்கோட்டின் துறைமுகத்திற்குவந்து சேர்ந்தது. இவர்களுக்குமுன் அராபியா வர்த்தகர்கள் அடிக்கடி இங்குவந்து வியாபாரம் செய்துகொண்டிருந்தார்கள். இவர்கள் போர்ச்சுகீஸியரைக்கண்டு பொறாமை யடைந்தார்கள். இருவருக்கும்

சண்டை நடந்தது. ஸாமொரீனும் போர்ச்சுகீஸியருக்கு அனு கூலமாயில்லை. இதனால் வியாபாரம் இங்குசெய்ய முடிய வில்லை

ஆகையால்போர்ச்சுகீஸியர் கப்பலுடன் கொச்சிக்குப் பிர யாணமானார்கள். இங்கு இவர்கள் வந்ததும் ஒருவரும் இவர்க ளைத் தடுக்கவில்லை. இங்கு ஒரு வியாபாரச்சாலையை ஏற்படுத் தினார்கள். அநேகச் சாமான்களை வாங்கிக்கொண்டு தங்கள் தேசத்திற்குத் திரும்பிச் சென்றார்கள். இவ்விதம் இவர்கள் தங்கள் தேசத்திலிருந்து தங்கம், வெள்ளி, பவழம், இரும்பு ஆயுதங்கள் முதலியவைகளைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு வாசனைத் திரவியங்கள், தேங்காய், கசகசா, பருத்தி, அவுரி, மிளகு, நெல் முதலிய சாமான்களைப் பெற்றுக்கொண்டு சென் றார்கள். இவர்கள் மேற்கூறிய வண்ணம் இந்தியாவில் சுமார் நூறு வருஷகாலம் அதிக லாபமுள்ள வியாபாரம் செய்துவந் தார்கள்.



## 29. ஜஹாங்கீரும் நூர்ஜஹானும்.

(ஸர் தாமஸ் ரோவின் வருகை)

குழந்தைகள் :—அப்பா! ஐரோப்பாவிலிருந்து போர்ச்சு கீஸியர் மாத்திரம்தான் இந்தியாவிற்கு வந்தார்களா?

தக :—இல்லை, நம்மை இப்பொழுது ஆண்டுவருகிற பிரி டிஷாரும் வந்தார்கள்.

குழ :—எப்பொழுது?

தக :—அக்பர் ஆளுகையின் இறுதியில்.

குழ :—பிரிடிஷாரும் போர்ச்சுகீஸியரும் சிநேகமாக வர்த் தகம் செய்தார்களா?

தக :—இல்லை, இவ்விருவருக்கும் வியாபார விஷயத்தில் பொறாமை விசேஷமாயிருந்தது.

குழ :—அப்பொழுது பிரிடிஷார் என்ன செய்தார்கள்?

தக :—தங்கள் தேசத்து ராஜாவைத் தங்கள் வியாபாரம் சரிவர நடக்க இந்தியாவிலுள்ள மன்னர்களுக்கு சிபார்சு செய்

யும்படி வேண்டிக்கொண்டார்கள் அவர் அதற்கிணங்கி ஸர் தாமஸ் ரோ என்பவரைத் தமது தூதராக இந்தியாவிற்கு அனுப்பிவைத்தார்.

குழ :—அப்பொழுது இந்தியாவில் ஆண்டுகொண்டிருந்த மன்னர்களில் பெரியவர் யார் ?

தக :—டில்லியில் ஆண்டுகொண்டிருந்த ஜஹாங்கீர் சக்கரவர்த்தி

குழ :—அப்பா ! ஜஹாங்கீர் சக்கரவர்த்தியைப் பற்றியும் அவ்வாங்கில தூதரைப்பற்றியும் சொல்லுங்கள்.

தக : — குழந்தைகளே ! அக்பர் சக்கரவர்த்தி இறந்தவுடன் அவருடைய மூத்தகுமாரராகிய ஸலீம் சக்கரவர்த்தி ஆனார். இவர் ஜஹாங்கீர் என்ற பட்டப்பெயரை வைத்துக் கொண்டார்.

இவர் தம் தகப்பனுருக்குப் பற்பல தொந்திரவுகள் செய்து வந்தார். இவர் குடிப்பிரியர். குரூரமனதுடையவர் இவர் சிம்மாஸனம் ஏறியவுடன் தமது தகப்பனுரைப்போல ராஜ்யபரிபாலனம் செய்ய இவருக்கு சக்தியுமில்லை, அறிவுமில்லை. அக்பர் மொகலாய ராஜ்யத்தை உறுதியாக ஸ்தாபித்தபடியால் தான் ஜஹாங்கீர் சக்கரவர்த்தியானவுடன் இவரது ராஜ்யம் சமாதானத்துடனிருந்தது

ஜஹாங்கீர் பட்டத்திற்கு வந்தவுடன் நூர்ஜஹானை மணம் புரிந்துகொள்ள விரும்பினார். இவள் ஷீர்கான் என்பவனுடைய மனைவியாயிருந்தமையால், இவளை மணம்செய்து கொள்ள முடியாமற் போயிற்று.

ஷீர்கான் கொலையுண்டபின் ஜஹாங்கீர் நூர்ஜஹானை விவாகம் செய்துகொண்டார்.

உடனே ஜஹாங்கீர் பேருக்கு மாத்திரம் சக்கரவர்த்தியாயிருக்க நேரிட்டது. ஏனெனில் நூர்ஜஹான் மிக்க புத்தியுள்ளவள். தன் கணவனைத் தன்னிஷ்டப்படி ஒரு பம்பரத்தை ஆட்டுவதுபோல் ஆட்டிவந்தாள். தானே அரண்மனையிலும், ராஜாங்க விஷயத்திலும் இட்டது சட்டமாயிருக்கும்படி நூர் ஜஹான் செய்துவந்தாள்.

ஜஹாங்கீருக்கோ அரசுபுரிய திறமை கிடையாது. ஆகையால் தமக்குப் புசிக்க நல்ல ஆகாரமும், குடிக்க மதுபானமும் கிடைத்தால் போதுமென்று எண்ணி நூர்ஜஹானை அவள் இஷ்டப்படி விட்டு விட்டார்


நூர்ஜஹான.

நூர்ஜஹானுக்கும் ஷீர்கானுக்கும் பிறந்த பெண் ஒருவள் உண்டு நூர்ஜஹான் தன் பெண்ணுக்குத் தக்க வயது வந்தவுடன் அவளை ஜஹாங்கீர் மனைவிகளில் ஒருவளுக்குப் பிறந்த புத்திரனாகிய ஷஹரியாவுக்கு கலியாணம் செய்துவைத்தாள். அவனையே பட்டத்திற்குரியவனாகச் செய்யவும் பிரயத்தனம் செய்தாள். ஆனால் அது முடியவில்லை.

ஜஹாங்கீர் அரசுபுரியும் காலத்தில் ஸர் தாமஸ் ரோ என்பவரை இங்கிலாந்தின் அரசரான முதலாம் ஜேம்ஸ் என்பவர் தமது தூதராக இந்தியாவிற்கு அனுப்பினார். இவர் ஜஹாங்கீரைக்கண்டு இங்கிலீஷ் வர்த்தகர்கள் இந்தியாவில் வியாபாரம செய்துவர உத்திரவு கேட்டுப் பெற்றார். இவர் இங்கு சிறிது காலமிருந்தமையால் ஜஹாங்கீருடைய ஆளுகையைச் செவ்வனே கவனித்து வந்தார் "இவர் அரசாளுவதில் சமர்த்தரல்லவென்றும், எப்பொழுதும குடித்துக்கொண்டிருந்தார்" என்றும் இவர் எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

## 30. ஷாஜஹான்.

குழந்தைகள்.—கமலம் :—அப்பா! நூர்ஜஹான் மிகவும் சாமாத்தியமுள்ளவளென்று சொன்னீர்களே! அவள் எண்ணம் ஏன் நிறைவேறவில்லை?

தக:—நூர்ஜஹான் ஜஹாங்கீர் காலத்தில் அரசாட்சிசெய்து வந்தது பிரஜைகளுக்கும் பிரபுக்களில் அநேகருக்கும் பிடிக்கவில்லை. ஆகையால் அவர்களெல்லோரும் ஜஹாங்கீருடைய குமாரர்களில் ஒருவனாகிய ஷாஜஹான் பக்கமிருந்து, அவனைச் சக்கரவர்த்தியாகச் செய்தார்கள்.

குழ : — அப்பா ! ஷாஜஹான் எப்பேர்ப்பட்டவர் ? எவ்வாறு அரசுபுரிந்தார் ?

தக :—குழந்தைகளே ! இவர் பட்டத்திற்கு வந்ததும், இவர் தம் சகோதரனையும் இன்னும் சிம்மாஸனத்துக்குரியவர்களையும் கொலைசெய்தார்

இவர்காலத்தில் ஆமத்நகரத்தில் கலகமுண்டாய்க் கொண்டிருந்தது. ஷாஜஹான் தெக்காணுக்குப்போய் அங்குள்ள கலகத்தை யடக்கினார் அவ்விதம் அவர் செய்யவே, ஆமத்நகரம் இவருக்குக் கீழ்ப்படிந்தது.

இவர் மம்டஸ்மஹால் என்ற பெண்மணியை மணம்புரிந்து கொண்டு ராஜ்யத்தை நன்றாக ஆண்டுவந்தார். சில காலஞ் சென்றபின்பு இவருக்கு குழந்தைகள் பிறந்தன.

இவர் காலத்தில் மொகலாய இராஜ்யம் உன்னத ஸ்திதியிலிருந்தது. இவர் இராஜ்யத்தில் வரும்படியும் அதிகமாகக் கிடைத்ததாம.

இதனால் மயில்வாகன சிம்மாஸனம் ஒன்றைச் செய்து வைத்தார். இதற்கு எத்தனையோ லக்ஷம் ரூபாய்களைச் செலவு செய்தார். இவருக்கு அழகான கட்டடங்களைக் கட்டுவைபதில் அதிகப்பிரியம். டெல்லியில் திவானிகாஸ், ஜம்மாமஸ்ஜிட் என்ற அழகான கட்டடங்களைக் கட்டிவைத்தார். தம மனைவி இறந்தபின் ஆக்ராவில் தமது மனைவியின் ஞாபகார்த்தமாக டாஜ்மஹால் என்ற அழகான கட்டடத்தைக்கட்டி அதில் தம் மனைவியை அடக்கம் செய்தார். இதைப்போல் அழகான கட்டடம் இப்பொழுது எங்குமில்லையாம்.

இவருக்கு வயது அதிகரிக்கவே, விசனமும் அதிகரித்தது. இவருடைய குமாரர்கள் ஒருவருக்கொருவர் சிம்மாஸனம்பெற சண்டைபோட்டுக்கொண்டிருந்தார்கள். இவர்களுக்குள் சண்டையும் வீண் மனக்குறைவுமில்லாமலிருக்க, இவர் தாராவை காபூலுக்கும் முல்டானுக்கும், ஷுஜாவை வங்காளத்திற்கும், ஔரங்சீப்பை தெக்காணுக்கும், முராடை குஜராத்துக்கும் தம்முடைய பிரதிநிதிகளாக நியமித்தார்.



ஆக்ராவிலுள்ள டாஜ்மஹால.

இவர்கள் தனிமையாகத் தூரதேசங்களிலிருந்த போதி லும், ஒவ்வொருவரும் தம் தகப்பனுருக்குப் பின் பட்டத் திற்கு வர முயன்றுவந்தார்கள்.

இப்படியிருக்கையில் ஷாஜஹான் வியாதியா யிருந்தார். உடனே இவர் இறந்துவிட்டதாகவும் பொய்யான சமாச்சா ரம இவரது குமாரர்களுக்குத் தெரிந்தது. இவர்களில் ஒவ் வொருவரும் பலத்த சேனையைச் சேகரித்துக்கொண்டு இராஜ் யத்தைப் பெற யுத்தம் புரிந்துவந்தார்கள். உடனே இவர்க ளது தகப்பனுர் சாகவில்லையென்றும், உயிர் பிழைத்தாரென் றும் தெரியவந்தது.

ஔரங்சீப்பும், மோராடும் தங்கள் தகப்பனுரைப் பார்க்க வந்தார்கள். தகப்பனுரைப் பார்த்தபின் ஔரங்சீப் தந்திர மாக அவரைச் சிறைச்சாலையில் வைத்துவிட்டார் இவர் சுவாதீனமின்றி துக்கத்துடன் எட்டுவருஷகால மிருந்தபின் மரணமடைந்தார்.

# 31. ஔரங்சீப்பும், அவரைப்பற்றி சில கதைகளும்.

குழந்தைகள் :—ஷாஜஹானின் புத்திரர்கள் ஒவ்வொருவரும் தானே சிம்மாஸனம் அடையவேண்டுமென்று யுத்தம் புரிந்தார்களே! எவர் ஜயித்துப் பட்டத்திற்கு வந்தார்?

தக :—ஔரங்சீப்

குழ :—அவரைப்பற்றி சொல்லுங்கள்.

தக :—இவர் மகமதிய மதத்தில் அதிகப் பற்றுள்ளவர். குரானில் சொல்லிய ஒழுக்கத்தின்படி நடப்பவர், வீண் செலவு செய்யார் இவர் மது பானம் செய்ததே இல்லை. எங்குபார்த்தாலும் மகமதிய மதமே பரவியிருக்க வேண்டுமென்பது இவரது இச்சை இவரைப்பற்றி சில கதைகள் சொல்லுகிறேன். அவைகளிலிருந்து அவர் இன்னும் எப்பேர்ப்பட்டவரென்று நன்கு விளங்கும்.



ஔரங்சீப்.

இவருடைய சகோதரர்கள் தங்கள் தகப்பனாது ராஜ்யத்தை ஆளவிரும்பினார்கள். அப்பொழுது இவர் தமது தம்பியாகிய மூராட் என்பவனுக்கு வெகு வினயத்துடன் ஒரு கடிதம் எழுதினார். அதில் "என் சகோதரனே! எனக்கு ராஜ்யபரிபாலனஞ் செய்வதில் சிறிதும் ஆசையில்லை. ஆனால் மகமதிய மதத்தில் உண்மையாய் பற்றுள்ள ஒருவனையே டில்லிக்கு சக்ரவர்த்தியாகச் செய்துவிட்டு நான் பக்கிரியாய் மக்காவுக்கு யாத்திரை செய்ய விரும்புகிறேன். என் சகோதரர்களில் நீயே என் மனதுக்கிசைந்த மகமதியன். ஆகை

யால உனக்கு ஆட்சேபனை ஒன்றுமில்லாவிட்டால் என் சைனியத்தை உனது சைனியத்துடன் சேர்த்துக்கொண்டு, நான் மற்ற சகோதரர்கள் இருவரையும் தோற்கடித்து, உனக்குப் பட்டம் கட்டிவைக்க விரும்புகிறேன்" என்று எழுதியிருந்தார்.

முராடோ மடையன். சதா மதுபான வெறியிலிருப்பவன். அவன் தன் அண்ணனாகிய ஔரங்சீப் எழுதினது தன் மேலுள்ள உண்மையான அபிமானத்தால்தானென்று எண்ணினான்.

ஔரங்சீப் யுத்தத்தில ஜயித்தபிறகு தாம் முராடுக்கு எழுதியிருந்தபடி அவனுக்குப் பட்டம கட்டிவைத்தார்.

பின்பு இவர் ஒருநாள் முராடை மதுபானத்தில் மூழ்கியிருக்கச் செய்தார். முராடுக்குக் குடிவெறி அதிகரித்ததும் அவன் அரசாட்சி செய்யத் தகுந்தவனல்லவென்று சொல்லி, இவர் அவனைச் சிறையில் வைத்தார். இன்னும் சிறிது காலத்திற்குப் பின முராடு ஒருவனைக் கொன்றதாகக் குற்றஞ் சாட்டப்பட்டு அவனை ஔரங்சீப் கொலை புரிவித்தார்.

பிறகு ஔரங்சீப் சிம்மாஸனம் ஏறினார்.

கமலம் :—அப்பா! இவர் வெகு தந்திரக்காரர்.

தக :—இன்னும் இவரைப்பற்றி சொல்லுகிறேன், கேளுங்கள் இவருக்கு சங்கீதம் என்றால் பிடிக்கவே பிடிக்காது. இவர் தமது அரண்மனையிலிருந்த சங்கீத வித்வான்களையும் நாட்டியம் செய்பவர்களையும் வேலையினின்று தள்ளிவிட்டார்.

அவர்கள் ஒருநாள் ஒரு பாடையைத் தூக்கிச் சென்றார்கள். அப்பொழுது ஔரங்சீப் 'யாரைத்தூக்கிச் செல்லுகிறீர்கள்' என்று கேட்டார். அதற்கு அவர்கள் சங்கீதத்தைக் குழிதோண்டி புதைக்கப் போவதாகச் சொன்னார்கள் "

"அப்படியானால் குழியை வெகு ஆழமாய்த் தோண்டி அதைப் புதையுங்கள்" என்று ஔரங்சீப் குரூரமான வேடிக்கையுடன் சொன்னார்.

கமலம் : — சங்கீதத்தில் ஔரங்சீப் அவ்வளவு ஞான சூனியரா ?

**தக :** — ஔரங்கசீப்புக்கு ராஜபுத்திரர்களையும் அவர்களுடைய இந்து மதத்தையும் அழித்துவிட வேண்டுமென்பது முக்கிய எண்ணம். அதற்காக வீணாய் வெகு பிரயத்தனப்பட்டார். அப்பொழுது இவருடைய குமாரர்களில் ஒருவன் இவர் ராஜ்யத்தை அபகரிக்க ராஜபுத்திரர்களுடைய உதவியைக் கோரினதாக ஔரங்கசீப் கேள்விப்பட்டார். உடனே ஔரங்கசீப் தமமுடைய மைந்தனுக்கு தாம் ஒரு கடிதம் எழுதுவதுபோல் எழுதி அக் கடிதத்தைத் தம சேவகர்கள் மூலமாய் ராஜபுத்திரர்களில் நடுவில் ஒருவரும் அறியாமல் போட்டுவிடச் சொன்னார். அக்கடிதத்தில், 'தம் மகனுடைய செய்கையை மெச்சினதாகவும், அதேமாதிரி தம் மகன் ராஜபுத்திரர்களோடு சிநேகம்செய்து வந்தால், இந்துக்களையும் இந்து மதத்தையும அழிக்க வேண்டுமென்ற தம்முடைய எண்ணம் சுலபமாய் பூர்த்தியாகும்' என்றும் எழுதி இருந்தார்.

இக்கடிதத்தை ராஜபுத்திரர்களில் ஒருவன் படித்துப் பார்த்து அதைத் தன் நண்பர்களுக்குக் காண்பித்தான், அவர்களெல்லோரும் ஔரங்கசீப்பின் குமாரனை நம்பக் கூடாதென்று தீர்மானித்துவிட்டார்கள்

**கோபாலன் :** — மகா புத்திமான் அப்பா! இவர்.

**தக :** — ஔரங்கசீப் அரசாட்சி செய்வதில் மகாசமர்த்தர். இவர் சளைக்காமல் ராஜயபாரம் செய்துகொண்டு வருவார். ஒருநாள் இவரைப்பார்த்து ஒருவர் "பாதுஷாவே! ராஜ்யத்திற்காக வெகு கடினமாய் உழைக்கிறீர்கள்" என்று சொன்னார்.

அதற்கு அவர் "பிறருக்கு உழைக்கவே நாம் எல்லோரும் பிறந்திருக்கிறோம். ஆகையால் எனது சுகத்தையே நான் நாடக்கூடாது. என்னுடைய குடிகளின் சுகத்தையே விருத்தி செய்யவேண்டும். ஆனால், ஐயோ! இவ்விஷயத்தை நாம் நன்றாய் அறிவதில்லை" என்று பதிலளித்தார்

**ராமன் :** — தம் கடமையைச் செய்வதில் அவருக்கு எவ்வளவு பற்று!

தக :—இவ்வளவு சாமர்த்தியவானு யிருந்தும் மகாராஷ்டிரர்களை மாத்திரம் இவரால் அடக்க முடியவில்லை

குழ :—அதேன், அப்பா! அப்படி?

தக : —அப்பொழுது மகாராஷ்டிரர்களுக்கு சிவாஜி என்ற இராஜாவிருந்தார் அவர்முன் ஔரங்சீப்பின் பிரயத்தனங்கள் பலிக்கவில்லை

குழ :—இந்த சிவாஜி எப்பேர்ப்பட்டவர்? ஔரங்சீப்பை அவர் எவ்வாறு அடக்கினுர்?

## 32. சிவாஜி.

தக:—குழந்தைகளே! பீஜப்பூர் ராஜ்யத்தில் ஷாஜி பான்ஸ்லே யென்ற ஜாகீர்தார் ஒருவரிருந்தார். சிவாஜி, அந்த ஷாஜி பான்ஸ்லேயின் புத்திரர் சிவாஜிக்கு அவருடைய குரு குதிரைசவாரி செய்யவும், வாள், ஈட்டி இவைகளை உபயோகிக்கவும் கற்றுக்கொடுத்தார். இராமாயணம், பாரதம் முதலியவைகளிலுள்ள வீரர்களின் கதைகளையும் அவர் போதித்துவந்தார் தம்முடைய தாயார்சொற்படி தமது குலதெய்வமாகிய பவானியை சிவாஜி பூஜித்து வந்தார்.

மகாராஷ்டிரர்கள் யுத்தம்செய்யப் போகும்போது சிவாஜியும் போவார். இவருக்கு வயது இருபது ஆனவுடன், பலமும் தைரியமுமுள்ள சில மஹாராஷ்டிரர்களை சேர்த்துக்கொண்டு, இவர் புரந்தர் என்ற கோட்டையைப் பிடித்துக்கொண்டார்

பீஜப்பூர் சுல்தானுடைய சில கிராமங்களிலும் சிவாஜி கொள்ளையடித்து வந்தார். இச்சங்கதி சுல்தானுக்குத் தெரிந்தது சுல்தான், தமது சேனுபதிகளில் ஒருவராகிய அப்ஸல் கானுக்கு (Afzalkhan) ஒரு சைன்யத்தைக் கொடுத்து சிவாஜியை ஜயித்துவரும்படி உத்தரவு கொடுத்தார். அப்ஸல்கான் பெருத்த சேனையுடன் சிவாஜியை எதிர்க்கச் சென்றுர்.

சிவாஜி சாமர்த்தியசாலி. ஆகையால் பெருத்த சேனையைக்கண்டு நடுங்கினபோதிலும், வஞ்சகமாக அப்ஸல்கானுடன் தனிமையாகப் பேசவேண்டுமென்று சொல்லி அனுப்பி

ஞர். அவரும் சமமதித்தார். இருவரும் சந்தித்தவுடன், சிவாஜி அப்ஸலகானைக் கொன்றுவிட்டார். பின்பு சிவாஜியின் சேனை ஓடிவந்து சுல்தானுடைய சேனையைத் தோற்கடித்தது.

பிறகு, பீஜப்பூர்சுல்தான் சிவாஜியை அடக்க எவ்வளவோ பிரயத்தனங்கள் செய்தார் அவைகளெல்லாம் வீணாய்ப்போகவே, சிவாஜியை பீஜப்பூர் ராஜ்யத்தில் மேற்கு பாகத்திற்கு அதிபதியாக ஒப்புக்கொள்ளும்படி நேரிட்டது. இதற்குப் பிறகுதான் சிவாஜி அநேக மொகலாய பட்டணங்களை நாசமாக்கினா. அவைகளிலுள்ள திரவியங்களைக் கொள்ளையடித்தார். ஆகையால் இவரையும், மகாராஷ்டிரர்களுடைய கொட்டத்தையும் அடக்கவேண்டுமென்று ஔரங்சீப் எண்ணினுர். உடனே பெருத்த சேனையுடன் தமது பிரதிநிதிகளிலொருவராகிய ஸயிஷ்டகானை அனுப்பினுர். இவர் பூனவுக்கு வந்தவுடன், ஒருநாள் சிவாஜி சில மகாராஷ்டிரர்களுடன் கலியாண ஊர்கோலம் செய்பவர்களைப்போல் வேஷம் போட்டுக் கொண்டு ஊர்வலம் வந்தார்.

விடியற்காலத்தில் சேனுபதி தங்கியிருந்த வீட்டிற்குள் போனுர். ஸயிஷ்டகானைப் பிடிக்க முயன்றார். ஸயிஷ்டகான் செத்தோம் பிழைத்தோமென்று உயிர்தப்பி ஓடிவிட்டான்.

சிவாஜியும், அவருடைய சைனியமும், ஜயபேரிகையுடன் ராய்கார் கோட்டைக்குப் போனுர்கள்.

ஔரங்சீப், ஸயிஷ்டகான் பயந்து ஓடி வந்ததைக் கேள்வியுற்றவுடன், இன்னும்பெருத்தசேனைகளை அனுப்பினுர். சிவாஜி தந்திரசாலி யாகையால், உடனே உடன்படிக்கை செய்துகொண்டார். பின்பு ஔரங்சீப் சிவாஜியை ஒரு விருந்துக்கு டில்லிக்கு வரவழைத்தார். ஆனுல் சிவாஜியை ஔரங்சீப் மரியாதையாக நடத்தவில்லை அதனுல் சிவாஜிக்குக் கோபம் வந்தது. உடனே டில்லியைவிட்டுப் புறப்பட்டுத் தம் தேசத்திற்கு வந்தார். மொகலாய சேனைகளைக் கண்டவிடமெல்லாம் சிவாஜி தோற்கடித்து வந்தார். இதனுல் அநேக நாடுகள் சிவாஜி கைவசமாயின. கடைசியாக சிவாஜி பட்டாபிஷேகம் செய்துகொண்டார் அரசரானமுதல் ஆறுவருஷந்தான் உயிருடனிருந்தார். இவர் இறக்கும்பொழுது இவரது தேசம்

ஸூரத் பட்டணத்திலிருந்து துங்கபத்திரா நதி வரையிலும் பரவியிருந்தது.

சிவாஜி சுறு சுறுப்புள்ளவர். இவர் தம்முடைய தேசம் சுயேச்சையா யிருக்கவேண்டுமென்று எண்ணினர். இவர் இதற்காக மகாராஷ்டிரர்களை ஒற்றுமையுட னிருக்க மிகவும் பிரயாசை எடுத்துக்கொண்டார் இவர் ஜனங்களுக்கு மத வைராக்கியத்தை யுண்டாக்கினர். இவர் தமது சேனையில் எல்லா ஜாதியாரையும் சேர்த்துக்கொண்டார். மகாராஷ்டிர ராஜ்யத்தைப் பலமாக ஸ்தாபித்தவர் இவர்தான்.

## 33. பானிபட்டு மகா யுத்தம்.

குழந்தைகள் :—அப்பா! இம் மகாராஷ்டிரர்களுடைய ராஜ்யம் எவ்வளவுகாலம் உன்னத ஸ்திதியிலிருந்தது?

தக :—பானிபட்டில் நடந்த மகாயுத்தம் வரையில்தான். பிறகு மகாராஷ்டிர ராஜ்யம் அநேக பிரிவுகளாய்விட்டது.

குழ :—பானிபட்டு மகாயுத்தத்தைப்பற்றி சொல்லுங்கள்.

தக :—குழந்தைகளே! சிவாஜிக்குப் பிறகு அவருடைய குமாரன் ஸம்பாஜி அரசனாகவிருந்தான் ஔரங்கசீப் அவனை யும் அவனுடைய மகனாகிய ஷாஹூவையும் சிறைச்சாலை யில வைத்தார். மகாராஷ்டிரர்கள் அதனால் மனத்தளர்ச்சி யடையவில்லை. ஔரங்சீப் இறந்தவுடன் ஷாஹூ மகாராஷ்டிர ராஜ்யத்துக்குத் திருமபிவந்தார். ஆனால் இவருக்கு ராஜ்ய காரியங்களைத தாமே பார்ப்பதற்கு வெகு சிரமமாயிருந்தது. ஆகவே, சாமர்த்தியசாலிகளான மந்திரிகள் ராஜ்ய காரியங்களை நடத்திவந்தார்கள். ஷாஹூ இறந்ததும் அவருடைய மந்திரியாகிய பேஷ்வா உண்மையாகவே அரசனாய் விட்டார்.

பானிபட் யுத்த சந்தர்ப்பத்தில் பேஷ்வாவா யிருந்தவர் பாலாஜீ பாஜீராவு. இவரது தகப்பனார் காலத்தில் மகாராஷ்டிர ராஜ்யம் அதிகமாய்ப் பரவலாயிற்று. இவர் காலத்தில் இவருடைய தம்பி ரகுநாதராவு என்பவர் மகமதியர்களுக்

குச் சொந்தமான லாஹூர் முதலிய விடங்களை ஜயித்துக் கைவசமாக்கிக் கொண்டார். இச்சங்கதியைக் கேட்டதும், லாஹூருக்கு அதிபதியான ஆமத்ஷா அப்தலி இந்தியாவிற்கு வந்தார். உடனே மகமதியர்களுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும், பெருத்த யுத்தம் பானிபட்டில் நடந்தது. மகாராஷ்டிர சைனியத்தில் அநேக தளகர்த்தர்களும் ஆயிரக்கணக்கான வீரர்களும், கணக்கிடக்கூடாத இதர ஜனங்களும் மடிந்தார்கள் மடிந்த தளகர்த்தர்களில் ஒருவர் பேஷ்வா பாலாஜி பாஜிராவின் மூத்த குமாரர். இந்த துக்கசமாச்சாரத்தைக் கேட்ட சிலநாட்களுக்குப் பிறகு பாலாஜி பாஜி ராவு இறந்தார். மகாராஷ்டிரர்களும் அதிக விசனமுற்றூர்கள். ஆகையால் அவர்களுடைய ராஜ்யம் சீர்குலைந்தது.



## 34. சென்னப் பட்டணமும் செண்ட் ஜார்ஜ் கோட்டையும்.

குழ:—மகமதியர்களுக்கும் மகாராஷ்டிரர்களுக்கும் யுத்தங்கள் நடந்துகொண்டிருந்தபொழுது இங்கிலாந்திலிருந்து வியாபாரத்திற்காக வந்த இங்க்லீஷ்காரர்களின் கதி என்ன ஆயிற்று?

தீக:—குழந்தைகளே! இங்க்லீஷ்காரர்களின் வியாபாரம் சற்று குறைந்தது. சிவாஜியே இருமுறை சூரத்பட்டணத்தைக் கொள்ளையடித்தார் இதனாலும் இம் மகமதிய மகாராஷ்டிர யுத்தங்களாலும் இங்க்லீஷ்காரர்களுக்கு இந்தியாவின் மேற்குக்கரையைவிட்டு கிழக்குக்கரையில் வியாபாரம் நடத்த ஆசை உண்டாயிற்று.

இதற்காகச் செங்கல்பட்டை ஆண்டுவந்த ஒரு சிற்றரசரிடமிருந்து **சென்னப்பட்டணத்தைப்** பெற்றூர்கள். இவர் விஜய நகர ராஜ்ய பரம்பரையைச் சேர்ந்தவர். இவர், ஒரு வீரரை செங்கல்பட்டை ஆண்டுவரும்படி நியமித்திருந்தார். அவர் பெயர் **சென்னப்பன்**. அவர் இறந்தபின், அவர் பிள்ளை செங்கல்பட்டி லிருந்தார். இவர் தமது தகப்பனரின் பெயரை இதற்கு இடவேண்டுமென்று இங்க்லீஷ்காரரைக் கேட்டுக் கொண்டார். அவர் இஷ்டப்படி இதற்கு **சென்னப்பன் பட்**



சென்னப்பட்டணத்திலுள்ள செயிண்ட் ஜார்ஜ் கோட்டை.

டணம் என்று பெயரிட்டு, இங்கு சேண்ட் ஜார்ஜ் கோட்டையையும் கட்டினார்கள். சென்னப்பன் பட்டணம் என்ற பெயர் நாளடைவில் சென்னப்பட்டணம் என்றாய்விட்டது.

கோட்டையில் இங்க்லீஷ்காரர்கள் சாமான்களை வைத்துக் கொண்டும் விற்றுக்கொண்டும் வசித்து வந்தார்கள். கோட்டைக்குச் சமீபத்தில் நெசவுத்தொழில் செய்பவர்கள், தயவர்கள், இந்து வியாபாரிகள் முதலியவர்கள் வசிக்க ஆரம்பித்தார்கள். இவர்கள் வசிக்கும் இடத்திற்கு ப்ளாக் டவுன் என்று பெயர். (அதாவது கறுப்புமனிதர் வசிக்கும் பட்டணம் என்று அர்த்தம்).

அக்காலத்தில் இங்கே அதிக வீடுகளுமில்லை, ஜனங்களுமில்லை. ஜனங்கள் அதிகரிக்கவே, வியாபாரம் பலப்பட்டது. வியாபாரம் பலப்படவே பட்டணமும் பெரிதாயிற்று. நமது சக்கரவர்த்தி ஐந்தாம் ஜார்ஜ் இந்தியாவைச் சுற்றி வந்தபொழுது சென்னைக்கு வந்தார். அப்பொழுது சென்னைவாசிகள் ப்ளாக் டவுன் என்பதற்குப் பதிலாக ஜார்ஜ் டவுன் எனப் பெயர் வைக்கவேண்டுமென்று நமது சக்கரவர்த்தியைக் கேட்டுக்கொண்டார்கள் அவரும் சம்மதித்தார். அவர் பெயர் ஜார்ஜ் ஆகையால் இப்பெயர் இதற்கு இடலாயிற்று.

## 35. லார்ட் க்ளைவ்.

### இங்க்லீஷ் அரசாட்சியை ஸ்தாபித்தவர்

### முதல் பாகம்.

குழ:—அப்பா! இவ் விங்க்லீஷ் வர்த்தகர்கள் சென்னைக்கு வந்தார்களே, பிறகு அவர்களுடைய வியாபாரம் எவ்வாறிருந்தது?

தக:—இங்கேவந்தும் இவர்களுடைய வியாபாரம் ஓங்கவில்லை ஏனெனில் மற்ற தேசத்தவர்களும் இவர்களைப்போலவே வியாபாரம்செய்து பணம் சம்பாதிக்க இந்தியாவுக்கு வந்தார்கள். ஆனால் அவர்களில் பிரெஞ்சுக்காரர்கள் இங்க்லீஷ்காரர்களை வியாபாரம் செய்யவொட்டாமல் தடுத்து வந

தார்கள். சாதாரணமாக ஒரு வியாபாரி அதிக பணம் சம்பா தித்தால் மற்றொரு வியாபாரிக்குப் பொறாமையுண்டாகு மல்லவா? அதுபோலவே, இருவரும் ஒருவருக்கொருவர் பொறாமையடைந்தனர். மேலும் ஐரோப்பா கண்டத்தில் இங்கிலீஷ்காரர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் யுத்தம் நடந்தது. ஆகையால் இந்தியாவிலும் இவ்விருகட்சியாருக்கும் யுத்தம் நடந்தது.



கிளைவ் பிரபு.

சிறிது காலஞ் சென்ற பின் ஐரோப்பா கண்டத்தில் இருவருக்கும் சமாதானம் உண்டாயிற்று. இந்தியாவிலும யுத்தம நின்று விட்டது. ஆயினும் பிரெஞ்சுக்காரர்களின் கவர்னராகிய டூப்ளே, இங்கிலீஷ்காரர்களை எப்படியாவது இந்தியாவிலிருந்து துரத்திவிட வேண்டுமென்று எண்ணினார். இதற்காகத் தமது சேனையை விருத்தி செய்தார்.

அச்சமயத்தில் சந்தா சாயப் என்ற ஒருவர் ஆற்காட்டு நவாபு ஆகவேண்டுமென்று ஆசைகொண்டார். அதற்காக அவர் டூப்ளேயை தமக்கு உதவிபுரியுமபடி கேட்டார். டூப்ளே அதிக சந்தோஷத்துடன் உதவிபுரியச் சம்மதித்தார். பிறகு ஆம்பூரில் சந்தா சாயபுக்கும், ஆற்காட்டு நவாபாயிருந்த அன்வார் உடீனுக்கும் யுத்தம் நடந்தது அதில் அன்வார் உடீன் மாண்டார். உடனே அவர் மகன் மகம்மது அலி திருச்சினாப்பள்ளியில் ஒளிந்துகொண்டார்.

சந்தா சாயபு டூப்ளேயின் உதவியைக்கொண்டு பெருத்த சேனையுடன் திருச்சினாப்பள்ளியை முற்றுகைப் போட்டார். ஆகையால் மகம்மது அலி உடனே இங்கிலீஷ்காரர்களைத் தமக்கு உதவிசெய்ய வரும்படி கேட்டார். அவர்களும்

அதற்குச் சம்மதித்து தங்களால் ஆனமட்டும் யுத்தம்செய்து பார்த்தார்கள் பிரெஞ்சுசேனை டலமுடையதா யிருந்தது. இன்னது செய்கிறதென்று இங்க்லீஷ்காரர்களுக்குத் தெரிய வில்லை அப்பொழுது இங்க்லீஷ்காரர்களிடம் வர்த்தக குமாஸ்தாவாக க்ளைவ் என்று ஒருவர் இருந்தார். அவர் சென்னை கவர்னருக்கு "ஐயா! நாம ஆற்காட்டை முற்று கைப்போட்டால்தான் நலம், சந்தா சாயபு தம் முக்கிய பட்டணம போய்விடுமே என்று நினைத்துத் திருச்சியை விட்டு ஆற்காட்டுக்கு வருவார்" என்று சொன்னார்.

கவர்னரும் அப்படிச்செய்ய சம்மதிக்கவே, க்ளைவ் சென்னையிலிருந்து 200 இங்க்லீஷ் சிப்பாய்களையும் 300 இந்திய சிப்பாய்களையும இட்டுக்கொண்டு ஆற்காட்டுக்குப் போய், அதை முற்றுகைப்போட்டார்.

சந்தா சாயப்பின் ராணுவம் க்ளைவின் சேனையைக் கண்டு பயந்து வேறுவழியாக ஓடிப்போய்விட்டது

சந்தா சாயபுக்கு தமது முக்கிய நகரமாகிய ஆற்காடு க்ளைவின் கைவசமாய்விட்டதென்கிற சங்கதி தெரிந்தவுடன் 10,000 மனிதரடங்கிய ஒரு சேனையைத தமது குமாரன் ராஜா சாயபு உடன் அனுப்பினார்

ராஜா சாயபு இரண்டுமாதம்வரையில் வீணாக யுத்தம் செய்தார் இங்க்லீஷ் சேனை சந்தா சாயபின் சேனையைத் தோற்கடித்தது சந்தா சாயபின் சேனை ஓடிவிட்டது

பின்பு க்ளைவு திருச்சிறுப்பள்ளிக்குப் போய்ப் பிரெஞ்சு சேனையுடன் யுத்தம்செய்து பிரெஞ்சுக்காரர்களை அங்கிருந்து துரத்திவிட்டார். அதன்மேல் இவர் மகம்மது ஆலியை ஆற்காட்டுக்கு நவாபாகச் செய்தார் ஆற்காட்டு முற்றுகை வெகு முக்கியமானது. இக்காலம் முதற்கொண்டு இங்க்லீஷ்காரர்களுக்குப் பலம் அதிகரித்தது. பிரெஞ்சுக்காரர்களுக்குப் பலம் குறைந்துவந்தது.

# 36 லார்ட் க்ளைவ்

## இரண்டாவது பாகம்

க்ளைவ் பிறகு இங்கிலாந்துக்குச் சென்றார். அவர் இந்தியாவில் சேகரித்து வைத்திருந்த பணத்தைக் கொண்டு தமது தகப்பனாருடைய கடனை அடைத்தார். அவரது பெற்றோர்கள் பிள்ளையைக் கண்டு களித்தார்கள். ஈஸ்டு இந்தியா கம்பெனியார் இவருக்கு ஒரு பட்டாக்கத்தியையும் 500 பவுன் ரொக்கமும் இனாமாகக் கொடுத்தார்கள்.

கல்கத்தாவிலும் இங்கிலீஷ்காரர்கள் வர்த்தகம் செய்து கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் சிராஜ் உத் தௌலா வங்காளத்தில் நவாபாக இருந்தார். இவர் இங்கிலீஷ்காரர்களுடன் சண்டை செய்து கொண்டே வந்தார். ஒரு சமயம் கல்கத்தாவிலுள்ள வில்லியம் கோட்டையை சிராஜ் உத் தௌலா பிடித்தார்.



(கல்கத்தாவிலுள்ள வில்லியம் கோட்டை)

அப்பொழுதுதான் க்ளைவ் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்தார். க்ளைவ், கோபாவேசத்துடன் கல்

கத்தாவுக்குச் சென்றார். வில்லியம் கோட்டையைக் கைவசமாக்கிக்கொண்டார்.

ஸிராஜ் உட் டௌலா அதற்குப் பயந்து இங்க்லீஷ்காரருடன் சமாதானம் செய்துகொண்டார். அவர் அவர்களுக்கு உண்டான நஷ்டங்களையெல்லாம் கொடுப்பதாகச் சொன்னார்.

மறுபடியும் ஐரோப்பா கண்டத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இங்க்லீஷ்காரர்களுக்கும் யுத்தம் உண்டானது. இந்தியாவிலுள்ள பிரெஞ்சுக்காரர்கள் நவாபுக்கு உதவிசெய்ய வந்தார்கள். இங்க்லீஷ்காரர்களை பிரெஞ்சுக்காரர்கள் எவ்விதமாவது இந்தியாவிலிருந்து துரத்திவிடவேண்டுமென்று தீர்மானித்தார்கள். இதற்காகவே அவர்கள் நவாபுக்கு உதவி புரிய வந்தது. நவாபு பெருத்த சேனையுடன் இங்க்லீஷ்காரருடன் யுத்தம்புரிய ப்ளாஸி என்ற விடத்திற்கு வந்தார். க்ளைவும் தமது சேனையுடன் அங்கு வந்தார். இருதிறத்தாருக்கும் யுத்தம் நடந்தது. நவாபின் சேனை ஓட ஆரம்பித்தது. க்ளைவுக்கு ஜயம் உண்டானது.

இந்த ஜயம் மிகவும் முக்கியமானது. இதுதான் வங்காளத்தில் இங்க்லீஷ் ராஜ்யத்தை ஸ்திரமாகச் செய்தது. க்ளைவ் தேக அசௌக்யத்தால் மறுபடியும் இங்கிலாந்துக்குச் சென்றார். அங்குள்ள அரசர், பார்லிமெண்டார் யாவரும் இவருக்கு லார்ட் (பிரபு) என்ற பட்டம் அளித்தார்கள்.

இந்தியாவில் வாவர ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள், கம்பெனியின் லாபத்தையே கவனிக்கவில்லை; சண்டை சச்சரவுகள் செய்தார்கள். ஆனதுபற்றி இங்கிலாந்திலுள்ள கம்பெனியின் பெரிய உத்தியோகஸ்தர்கள் மறுபடியும் லார்ட் க்ளைவை இந்தியாவிற்குப் போய் யாவற்றையும் சீர்திருத்திவிட்டு வரும்படி கேட்டுக்கொண்டார்கள்.

க்ளைவு அப்பொழுது கவர்னராக இந்தியாவுக்கு வந்தார். இங்கு வந்து அநேக சீர்திருத்தங்களைச் செய்தார். சண்டை சச்சரவுகளை மிகுந்த தைரியத்துடன் அடக்கினார். மறுபடியும் அவர் இங்கிலாந்துக்குப் போவதற்குமுன் அப்பொழுது இருந்த டில்லிபாதுஷாவை இங்க்லீஷ் கம்பெனியாருக்கு, வங்காளம், பீஹார், ஒரிஸா இம்மூன்று மாகாணங்களின் நிலவரி

வசூல் செய்யும் அதிகாரத்தைக் கொடுக்கும்படிச் செய்தார். சிறிதுகாலஞ் சென்றபின் இவர் இறந்தார். இவரால்தான் ப்ரிடிஷ் ராஜ்யம் இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது.

குழ: —ராமு: 'அப்பா! க்ளைவின் கதை மிகவும் நன்றாயிருக்கிறது இவர் மிகக தைரியசாலியாயும், யுக்திசாலியாயும் இருந்தமையால்தான் மூன்று யுத்தங்களிலும் ஜயித்தார்.

தக: —'ஆம, அவ்விதம இருநதிராவிடின் இங்க்லீஷ்காரர் களுக்கு இங்கு அதிகாரம் கிடைத்திருந்திருக்குமா?'

## 37 ஐதரும் திப்புவும்.

குழந்தைகள் — ராமு:—அப்பா! வங்காளத்து நவாபுடன் பிரெஞ்சுக்காரர்கள் தோல்வி யடையவே, பிரெஞ்சுக்காரர்கள் என்ன செய்தார்கள்?

தக:—பிரெஞ்சுக்காரர்கள தென் இந்தியாவில் வந்தவாசி முதலிய அநேக விடங்களில் யுத்தம் செய்தார்கள் இவர்கள் இங்க்லீஷ்காரர்களை ஜயிக்க முடியவில்லை. இப்பொழுது இவர்கள் தங்களை எங்கே இங்க்லீஷ்காரர்கள் துரத்திவிடுவார்களோ வென்று பயந்து, இங்க்லீஷ்காரர்கள் தங்கள் மேலிட்ட நிபந்தனைகளுக்குச் சம்மதித்தார்கள்.

பிறகு, அவர்கள் புதுச்சேரி முதலாகிய சில குறிப்பிட்ட இடங்களில் கோட்டைகள் கட்டாமல் அமரிக்கையாய் வியாபாரம்செய்ய, இங்க்லீஷ்காரர்கள் அவர்களுக்கு உத்திரவு அளித்தார்கள். இருந்தபோதிலும், ஏதாவது அநுகூலமான சந்தர்ப்பங்கள் நேரிடும்பொழுது, பிரெஞ்சுக்காரர்கள் தாங்கள் முன்னிருந்த நிலைமையை அடைய முயன்றார்கள். ஆனால் அப்பிரயத்தனங்கள் ஒன்றும் கைக்கூடவில்லை.

குழ.—ராமு:—அப்பா! பிரெஞ்சுக்காரர்களுக்கு அநுகூலமான சந்தர்ப்பங்கள் யாரால் ஏற்பட்டன?

தக: — ஐதர் ஆலி என்றொருவரிருந்தார், அவராலும் அவருக்குப்பின் அவருடைய புதல்வனாகிய திப்பு என்பவராலுந்தான்

குழ:—அவர்களைப்பற்றி சொல்லுங்கள்.



# ஐ த ர் ஆ லி

## (முதல் பாகம்.)

**தகப்பனார்**:—ஐதர் ஆலி ஒரு மகமதிய போர்வீரன். இவர் மைசூர் ராஜ்யத்து தளகர்த்தர்களிலொருவர் ஆனார். சிறிதுகாலத்திற்குள் இவரே மைசூருக்கு ராஜாவாக ஆய்விட்டார். ஆகவே, இவர் மைசூரைச் சுற்றிலுமிருந்த நாடுகளை ஜயிக்க யத்தனித்தார்

அந்நாடுகளி லொன்று ஆற்காட்டு ராஜ்யம். அதற்கு அதிபதி இங்க்லீஷ்காரருடைய துணை அரசரான மகமது அலி. அந்நாட்டை ஐதர் எதிர்க்கவே, இங்க்லீஷ்காரர்கள் ஐதருடன் போர்புரியும்படி நேரிட்டது பிறகு இவ்விருவரும் சமாதானம் செய்துகொண்டார்கள் சமாதானமான சில வருஷங்களுக்கெல்லாம், இங்க்லீஷ்காரர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஐரோப்பாவில் சண்டையுண்டாயிற்று அப்பொழுது வழக்கம்போல் இந்தியாவிலும் இங்க்லீஷ்காரர்கள் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான இடங்களை யெல்லாம் பிடித்தார்கள்.

அவைகளில் மாஹி என்ற இடத்தைப் பிடிக்க ஐதர் அலியின்ராஜ்யத்தின் வழியாகப் போகவேண்டியிருந்தது. இங்க்லீஷ்காரர்கள் ஐதர் உத்திரவின்றி மாஹியைப் பிடிக்க அவ்வழியாகச் சென்றார்கள்

உடனே ஐதருக்கு அடக்கமுடியாமற் கோபம்வந்தது. அவர்களைத் தண்டிக்க பெருத்த சேனையுடன் ஐதர் சென்றார். இதைக் கேள்வியுற்ற இங்க்லீஷ்காரர்களும் தங்களுடைய ஸைனியங்களை அனுப்பினார்கள்.

ஆரம்பத்தில் ஐதர் அலி ஜயம்பெற்றார். கடைசியாக கூடலூருக்குச் சமீபத்திலுள்ள பறங்கிப்பேட்டையில் (Porto Novo) கர்னல் கூட் என்பவர் ஐதர் அலியைத் தோற்கடித்தார். கர்னல் கூட்டை போர்முனைக்கு அனுப்பியது அப்பொழுது கவர்னர் ஜனரலாயிருந்த உவாரன் ஹேஸ்டிங்க்ஸ் என்பவர்.



உவாரன் ஹேஸ்டிங்ஸ்.

அபஜயம் அடைந்த சில நாட்களுக்குப் பிறகு ஐதர் இறந்தார். சண்டை முடிவிற்கு வரவில்லை. ஏனென்றால் பிரெஞ்சுக்காரர்கள் பிரான்ஸ் தேசத்திலிருந்து ஒரு பெரும் கப்பற்படையை ஐதருக்கு உதவிபுரியும்படி அனுப்பியிருந்தார்கள். அது அப்பொழுதுதான் வந்துசேர்ந்தது.

ஆகவே. ஐதருடைய மகன் திப்பு சண்டையை நிறுத்தவில்லை.



## திப்பு சுல்தான்

(இரண்டாம் பாகம்.)

**தகப்பனா:** -- திப்பு மைசூருக்கு சுல்தான் ஆனதும் முன்னிலும் அதிகமாக யுத்தம் செய்தார். பிரெஞ்சுக்காரர்களும் அதிக உற்சாகத்துடன் அவருக்கு உதவிபுரிந்தார்கள். ஆனால் ஐரோப்பாவில் இங்க்லீஷ்காரர்களும், பிரெஞ்சுக்காரர்களும் சமாதானம் செய்துகொண்டார்கள்.

ஆகவே, இந்தியாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களும் சண்டையை நிறுத்தவேண்டியதாயிற்று. ஆயினும் திப்பு சுல்தான்

இன்னும் சிறிதுகாலம் தீவிரமாய் சண்டைசெய்து பார்த்தார். அதனால் ஒருலாபமும் அவர் அடையவில்லை ஆகையால் இங்க்லீஷ்காரர்களுடன் அவர் சமாதானம் செய்துகொண்டார்

இவர் மகமதிய மதத்தில் அதிக பற்றுள்ளவர் ஆனதுபற்றி இவர் மகமதிய மதத்தைப் பரவச்செய்ய மிகவும் முயன்றார். இக்காரணத்தால்தான், காரன் வாலிஸ் பிரபு இங்க்லீஷ்காரர்களுடைய கவர்னர் ஜெனரலாகவிருந்தபொழுது, திருவாங்கூர் ராஜயத்தின்மீது திப்பு சுல்தான் படையெடுத்துச் சென்றார்

திருவாங்கூர் ராஜா இங்க்லீஷ்காரர்களின் துணை அரசர்களில் ஒருவர் ஆகையால் காரன்வாலிஸ் பிரபு திப்புவை எதிர்க்க நேர்ந்தது இதனால் உண்டான சண்டையில் திப்பு சுல்தான் தம்முடைய ராஜ்யத்தில் பாதியை இழக்கும்படி நேர்ந்தது அதுமுதற்கொண்டு திப்பு சுல்தானுக்கு தூக்கம் பிடிக்கவேயில்லை எப்படி மறுபடியும் தாம இழந்த நாடுகளைக் கைப்பற்றிக் கொள்வதென்ற எண்ணமே அவர் மனதில் குடிகொண்டிருந்தது

சிறிதுகாலத்திற்குப் பிறகு வெல்லெஸ்லி பிரபு இந்தியாவுக்கு கவர்னர் ஜெனரலாக வந்தார். அப்பொழுது பெரிய நெப்போலியன் என்ற பிரானசுதேசத்து வீரன் இந்தியாவைக் கைப்பற்ற முயற்சிகள் செய்துவந்தார். அவருக்கு திப்பு சுல்தான் நிரம்ப அநுகூலமாக விருந்தார். இதைத் தெரிந்து கொண்ட வெல்லெஸ்லி பிரபு, திப்பு சுல்தானுடைய ராஜ்யத்தின்மீது படையெடுத்துச் சென்றார். மகாவீரராகிய திப்பு சுல்தான் என்ன முயன்றும் முடியாமல் அபஜயமடைந்து யுத்தமுனையில் இறந்தார்



## 38. இந்தியாவில் நேர்ந்த பெருத்த ஸிப்பாய் கலகம்.

குழந்தைகள் :—அப்பா! உவாரன் ஹேஸ்டிங்க்ஸ், காரன் வாலிஸ் பிரபு, வெல்லெஸ்லி பிரபு, இவர்களை கவர்னர் ஜெனரல் என்றீர்களே! இப்பொழுது கவர்னர் ஜெனரலாக விருப்பவரை விசேஷமாய் வைஸிராய் என்று வழங்குகிறார்களே! இவ்விரண்டு பதங்களுக்கும் ஒரே அர்த்தமா?

கிருக்கும்படியான மிகுந்த ஞானத்துடன் "ஆம், அநேக குழந்தைகள் இப்பேர்ப்பட்ட சமாச்சாரத்தைக் கேட்டதும், கர்வம் கொள்வார்கள் ஆனால் அதை வகிப்பது எவ்வளவு கடினம் என்பது அவர்களுக்குத் தெரியாது. அதனால் பெருமை அதிகரிக்கும். ஆனால் அத்துடன் அளவற்ற பொறுப்பும் உண்டு" என்று சொன்னார். சற்றுநேரம் தமக்குள் ஆலோசித்து, "நடை, உடை, பேச்சுகளில் வெகு மரியாதையாயும் கௌரவமாயு மிருக்கவேண்டுமென்றும், செவ்வையாகப் படிக்கவேண்டுமென்றும்," எனக்கு நீங்கள் அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்ததின் அர்த்தம் இப்பொழுது எனக்கு நன்றாக விளங்குகிறது. நான் எல்லா விஷயத்திலும் நல்லவளாகவே இருப்பேன்" என்று சொன்னார்.

இவரது பதினெட்டாவது வயதில் இவரது பெரிய தகப்பனார் குழந்தைகளில்லாமல் இறந்துபோகவே, இவர் இங்கிலாந்து அரசியானார்.

இவர் அரசியான பிற்பாடு, இவர் தமது உறவினரான ஆல்பர்ட் என்பவரை மணம்புரிந்துகொண்டார்கள். இவருக்கு அநேக குழந்தைகளும், பேரன் பேத்திகளுமுண்டு. எப்பொழுதும் விக்டோரியா ஜனங்களுடைய நன்மையையே நாடி வந்தார்கள்.

இவர்தான் இங்கிலாந்தை ஆண்ட மன்னர்களில் அறுபது வருஷகாலம் அரசாட்சி பூர்த்தியானதற்காக முதல் முதல் சஷ்டிபூர்த்தி (டயமண்ட் ஜுபிலி) செய்துகொள்ளும் பாக்கியம் பெற்றார்கள்.

இவரது காலத்தில்தான் இங்கிலாந்து ஜனங்களும் தங்கள் இராஜ்ய விஷயங்களைத் தாங்களே பார்த்துக்கொள்ளும் பாக்கியம் பெற்றனர். தமது சஷ்டிபூர்த்தியான ஐந்தாறு வருஷங்களுக்கெல்லாம் விக்டோரியா மகாராணியார் பரலோகமடைந்தார்கள்.



## 40. ஜார்ஜ் சக்கரவர்த்தியும் டில்லி தர்பாரும்.

தகப்பனார்: — "நமது இந்தியா தேசத்திற்கு இப்பொழுது சக்கரவர்த்தி இன்னார் என்று உங்களுக்குத் தெரியுமா?"

**கமலா** :—'(முகமலர்ச்சியுடன்) அப்பா! நான் சொல்லட்டுமா?'

**தக** :—'தெரிந்தால் சொல், பார்ப்போம்.'

**கமலா** :—'நமது தேசத்திற்கு அரசர் ஜார்ஜ் சக்கரவர்த்தி.'

**ராமன்** :—'அப்பா! நேற்றுகூட என் உபாத்தியாயர் ஜார்ஜ் சக்கரவர்த்தியின் உருவப்படத்தைக் காட்டினரே!'

**தக** :—'ஆம், அவர்தான் நமது சக்கரவர்த்தி. அவர் உருவப்படத்தைப் பாருங்கள்.

விக்டோரியா மகாராணியார் காலஞ்சென்றபிறகு அவருடைய மூத்த புத்திரர் எட்வர்ட் (7-வது) நமது சக்கரவர்த்தியாக இருந்தார். அவர், தமது இராஜ்ய முழுவதும் சண்டைசச்சரவின்றி சமாதானமே குடிகொண்டிருக்க வேண்டுமென்று முயன்றார். அவர் இறந்தவுடன் அவருடைய புத்திர ஜார்ஜ் சக்கரவர்த்தியானார்.



காலஞ்சென்ற எட்வர்ட் சக்கரவர்த்தி.

இவர் 1865-ம் வருஷம் ஜூன் மாதம் 3 உ யன்று பிறந்தார்: குழந்தைப் பருவத்தில இவர் தமது சகோதர சகோதரிகளிடத்தில் மிக்க அன்புடன் விளையாடி வந்தார். இவருடைய தாயாராகிய அலக்சாண்ட்ரா ராணியாரும் தம குழந்தைகளின் படிப்பு முதலியவைகளைக் கவனித்துவந்தார்கள். தக்க வயது வந்தபின்பு, ஒரு உபாத்தியாயர் இவருக்குக் கல்வி போதித்து வந்தார். ஜார்ஜ் சுறுசுறுப்புள்ளவர்: படிப்பதில் அவருக்கு பிரியம் உண்டு: ஆகையால் இவர் பாடங்களை நன்றாகப் படித்துவந்தார். சித்திரம் வரையவும், நீந்தவும் கற்றுக்கொண்டார். குதிரை சவாரிசெய்ய விரும்பினர். இவர் தகப்பனர் இவருக்குக்



அலெக்சாண்ட்ரா ராணியார்—(நமது சக்கரவர்த்தியின் தாயார்.)

குதிரைசவாரி செய்துவரக் கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்தார். இவர் தச்சுவேலையில் பழகி அத்தொழிலில் தேர்ச்சி அடைந்தார்.'

**ராமன்:**—'அப்பா! நமது தேசத்தில் பணக்காரப் பிள்ளைகள் இவ்வேலையைக் கற்றுக்கொள்ள விரும்புவதில்லையே! இதை இழிவாக நினைக்கிறார்களே!'

**தக:**—அப்படி நினைப்பது சரியன்று, சக்கரவர்த்தியினுடைய பிள்ளை யல்லவா இவர்? இவர் யாதொரு டம்பமின்றி இவ்வேலையைக் கற்றார். குழந்தைகளே! இவர் தோட்டம் வைத்தும் அதில் வேலையும் செய்திருக்கிறார்.

இதற்கு பின்பு இவர் தகப்பனார் இவரைக் கப்பலில் வேலைசெய்ய அனுப்பினார். இவர் கப்பலில் பற்பல வேலைகளைச் செய்துவந்தார். இவர் கப்பலோட்டும் வேலைக்குரிய பரீக்ஷையில் தேறினார். பல தேசத்துத் தபால்தலை (ஸ்டாம்பு)

களைச் சேகரிப்பதில் மிக்க பிரியமுடையவர். உலகத்திலுள்ள தபால்தலைகளைச் சேர்த்து ஒரு புத்தகத்தில் அழகாக ஒட்ட வைத்திருக்கிறாராம். இவருக்கு வேட்டையாடுவதிலும் புட்பால் (Foot-ball) விளையாடுவதிலும் ஆசை உண்டு.

இவர் இயற்கைப் பாடம், ரசாயன சாஸ்திரம் (Chemistry) முதலியவைகளைக் கற்றுக்கொண்டார்.

இவர் மேற்கூறிய வண்ணம் பற்பல விஷயங்களைக் கற்றுக் கொண்டு வந்தமையால்தான் அறிவுள்ளவரானார். கப்பலில் சண்டை செய்யக் கற்றுக்கொண்டு அதில் சமர்த்தரெனப் பேர்பெற்றார்.

இவருக்கு விவாகம் நடந்தது. (ப்ரின்ஸஸ்) மேரி என்ற பெண்மணியை மணந்துகொண்டார். பற்பல தேசங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள ஜனங்களின் நடை, உடை, பாவனை முதலியவைகளை அறிந்துகொண்டார். இவர் இளவரசரா யிருந்தபொழுது இந்தியாவிற்கு வந்தனர். அப்பொழுது நமது தேசத்து ஜனங்கள், அவர்களைக்கண்டு மகிழ்ந்தார்கள். அவர்களுக்கு வெகு மரியாதை செய்தார்கள்.

இவர்கள் இந்தியா முழுவதையும் சுற்றிப் பிரயாணம் செய்தபின் இங்க்லாந்துக்குத் திரும்பிச் சென்றார்கள். அவ்வீட்டில் தமது தகப்பனார் தாயாரிடத்திலும், மந்திரி முதலியவர்களிடத்திலும தாங்கள் செய்துவந்த பிரயாணத்தைப் பற்றி சொன்னார்கள்; நம்மிடத்தில் அதிக அநுதாபம் காட்டினார்கள்.

சிறிதுகாலஞ் சென்றபின் எட்வர்ட் சக்கரவர்த்தி இறந்தார். உடனே ஜார்ஜ் இந்தியாவுக்குச் சக்கரவர்த்தி ஆனார்.

குழந்தைகளே! நமது சக்கரவர்த்தியும், மேரி ராணியாரும் மறுபடியும் இந்தியாவுக்கு வந்தார்கள். அப்பொழுது டில்லிமா நகரத்தில் தர்பார் ஒன்றுகூட்டி மகுடாபிஷேகஞ் செய்துகொண்டனர். பல தேசத்து இந்திய மன்னர்களும், பிரபுக்களும், சீமாட்டிகளும் இந்த தர்பாருக்குப் போயிருந்தார்கள். அச்சமயந்தான் டில்லிமாநகரம் இந்தியாவுக்கு முக்கிய பட்டணமாக ஆயிற்று.



யுத்தகளத்தில் நமது சக்கரவர்த்தி.

இந்திய வீரர்கள் பெல்ஜியத்தில் ஜர்மானியருடன் யுத்தம் புரிந்தபொழுது, இவர்களுடைய செய்கைகளையும், சுகதுக்கங்களையும் இவர் அறியத் தாமே யுத்தகளத்திற்குச் சென்றார்.

"நமது சக்கரவர்த்தி நீடூழிவாழ்க."